உ

கணபதி துணை.

முருகக்கடவுள் துணை.

சுப்பிரமணியக்கடவுள்வரப்பிரசாதியாய்த்

திருவண்ணாமலையில் எழுந்தருளியிருந்த

# அருணகிரிநாத சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்புகழ்.

முதற்பாகம்.

இஃது

பல கையெழுத்துப் பிரதிரூபங்களைக்கொண்டு

திருப்பாதிரிப்புலியூர் வித்துவான்

**சிவசிதம்பரமுதலியாரவர்களால்**

பரிசோதிப்பித்து

வடர்துப்பாடி

**த. சுப்பிரமணியபிள்ளையவர்களால்**

சென்னபட்டணம்

கா. முருகேசமுதலியாரவர்களுடைய

ஹிந்து தியலாஜிகல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

ஜய வருடம் கார்த்திகை மீ.

December, 1894.

உ

சிவமயம்.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

சிவமயம்.

# முகவுரை.



சிவபெருமானுக்குத் தேவார திருவாசகங்கள் எவ்வளவு உகந்த ஸ்தோத்திரங்களா யிருக்கின்றனவோ அதுபோல முருகக்கடவுளுக்கு மிகவும் பிரியமானது திருப்புகழ் என்னும் செஞ்சொற் பிரபந்தம். இதை அச்சிடவேண்டும் என்கிற எண்ணம் எனக்கு இருபதுவருஷங்களுக்கு முன் உண்டாயிற்று. அதுமுதற் பல இடங்களிலிருந்து புஸ்தகங்களை வருவித்து ஆயிரத்திருநூறு பாடல்கள் சேகரஞ்செய்தேன். புத்தகந்தோறும் பாடல்கள் வேறுபட்டிருந்தமையால், அவைகளையெல்லாம் பரிசோதித்து ஒழுங்குபடுத்துவது அதிகபிரயாசமாக இருந்தது. இக்காரணத்தாலும், எனக்கு அவகாசமில்லாமையாலும், இன்னும் சில காரணங்களாலும் இப்புத்தகம், வெளிவர இது காறும் தாமதித்தது. திருப்பாதிரிப்புலியூர் வித்துவான் ம-ா-ா-ஸ்ரீ சிவசிதம்பர முதலியாரவர்கள், அதிகசிரத்தையையும் முயற்சியையும் உடையவர்களாகி என் எண்ணத்தை முடிப்பித்தார்கள். ஒவ்வொரு பிரதியிலும் பாடல்கள் அதிகப் பிழையாயும் ஒன்றுக்கொன்று அதிகவித்தியாசமாயும் இருந்தமையால் அவைகளைச் சீர்ப்படுத்த ஷை முதலியாரவர்களெடுத்துக்கொண்ட முயற்சி அளவிறந்தது. அதற்காக நான், அவர்களுக்கு மனப்பூர்வமான வந்தனங்கள் அளிப்பதன்றி வேறேயாது கைம்மாறு அளிக்கவல்லேன்? சிலபுத்தகங்களில் சிலபாடல்கள் அடிகள் மாற்றப்பட்டிருந்தன. சிலவற்றில் பொதுவான பாடல்கள் ஸ்தலங்களுக்கும், ஒருஸ்தலத்துக்குரியபாடல் மற்றொரு ஸ்தலத்துக்குமாகத் திருப்பப்பட்டிருந்தன. இதற்குத் திருஷ்டாந்தம்,—"தோகைவாசி நடத்தும் பெருமாளே" என்

பதை 'சோலை மாமலைநிற்கும் பெருமாளே' என்றும், "ஓ ரெழுத்திலாறெழுத்தை யோதுவித்த பெருமாளே" என்பதை 'ஓசையுற்ற சோலைவெற்பில் மூகைபெற்ற பெருமாளே' என் றும், "கொடுமுடிக்குமரப் பெருமாளே" என்பதை 'குருமலைக்குமரப் பெருமாளே' என்றும், "மாடையம்பதிவாழ்வே தேவர்கள் பெருமாளே" என்பதை 'மாபரங்கிரிமீதேமேவிய பெருமாளே' என்றும் வேறுபடுத்தப்பட்டிருந்தன. இன் னும் இவைபோலுள்ள வேறுபாடுகள் மிகப்பல. இவ்வேறு பாடுகளை யெல்லாம் பிரதிகளைக்கொண்டு கூடியவரையில் நீக்கிப் பாடல்கள் சுத்தஞ்செய்யப்பட்டன. இவ்வளவு தூரம் ஆராய்ச்சிசெய்து ஒழுங்குபடுத்தியும், பாடல்களெல் லாம் அருணகிரிநாதசுவாமிகள் திருவாக்கிலிருந்துவந்த படியே கலப்பில்லாமலிருக்கின்றனவென்று சொல்லத்துணிந் திலன். ஓலைப்புத்தகங்கள் பலவற்றிற் பலவாறாக எழுதப் பட்டிருக்கும்பாடல்கள் இப்போது ஒருவாறு ஒழுங்காகத் திரட்டி எல்லோரும் படிப்பதற்குச் சுலபமாக ஒருபுத்தக மாக்கப்பட்டன என்று மாத்திரம் சொல்லக்கூடும். இப்புத் தகத்தில் எவ்வகைப் பிழைகளிருந்தாலும் அவைகளை யெல் லாம் பொறுப்பதன்றி அவற்றை அடியேனுக்குத் தெரிவிக் கும்படிக்கும் கற்றுணர்ந்த பெரியோர்களை வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன். முருகப்பெருமானுடைய திரு வருளினால் இப்புத்தகம் இரண்டாம்பதிப்புக்கு வருமாயின் அக்காலத்தில் மேற்கண்டவழுக்களைக் களைந்துவிடலாம். எளிதில் பொருள்விளங்கும்பொருட்டுப் பாடல்களில் சிற் சில இடங்களில் சந்திகள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அதை ஆன்றோர் அருவருக்காமல் அங்கீகரித்தல் வேண்டும். இது நிற்க.

சிவஸ்தலங்களுள்ளே தேவாரம்பெற்றவைகள் எப்ப டிச் சிறப்புற்றிருக்கின்றனவோ அதுபோல் முருகப்பிரானு டைய கோயில்களில் திருப்புகழ் பெற்றவை சிறப்புற்றன வாம். ஆதலால் அப்படிப்பட்ட கோயில்களில் தீபாரா தனைக்காலத்தில் அவ்வவற்றிற்குள்ள திருப்புகழ்ப்பாடல்

களில் ஒன்றையேனும் சொல்லும்படி கோயிலதிகாரிகள் செய்வார்களேயாயின் அது பெரும்புண்ணியமாயிருக்கும். திருப்புகழ்பெறுத கோயில்களிலும் பொதுப்பாடல்களா யுள்ளவற்றில் ஒக்கதொன்றைச்சொல்லித் தீபாராதனை செய்வித்தல் மிகவும் உத்தமம்.

முருகப்பெருமானுடைய அருமபெரும்புகழாகிய இத் திருப்புகழை நியமமாகப் பாராயணஞ்செய்யும் அடியார்கள் இம்மையில் எல்லாப் பாக்கியங்களையும்பெற்று மறுமையில் மோக்ஷமடைவார்களென்பதற்கு யாதோர் ஐயமுமில்லை.

நான் பாடல்கள் சேகரஞ்செய்யுங்காலத்தில் தங்களிடமிருந்த பிரதிகளைத்தந்த புண்ணியவான்களுக்கும, பிறரிடத் திருந்தவைகளை வருவித்துத்தந்த அன்பர்களுக்கும், அநேக வந்தனம் அகமகிழ்ந்தளிக்கின்றேன். இவர்களில் கருங்குழி ஞானப்பிரகாச ஐயரவர்களுடைய குமாரராகிய ஆறுமுக ஐயரவர்களை முக்கியமாகச்சொல்லவேண்டும். இவர், மேற் கூறிய இரண்டுவகைப்பட்ட உதவிகளும் செய்ததன்றி அநேகநாள என்னுடன் இருந்தும், தாம் தனியேயிருந்தும், பாடல்களுக்கு அகராதிமுதலிய ஏற்படுத்தியும், அவைகளைப பிரிக்கவேண்டியபடியே பிரித்தும், இன்னும் பலவித வேலை செய்தும், பேருதவிபுரிந்தனர். இவ்வளவும் இவர் பொருளாசையினாலல்லாமல் திருப்புகழ் வெளியாகவேண்டுமென் கிற பேரவாவினாலேயே செய்தமையால், இது மிகவும் வியக்கற் பாலதேயாம்.

வரிசைப்படுத்திய பொழுது, முருகக்கடவுளுக்கு முக்கியமான படைவீடுகளாகிய திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை ஆகிய ஆறு ஸ்தலங்களின் பாடல்கள் முறையே முதலில் வைக்கப்பட்டன. பஞ்சபூதஸ்தலங்களாகிய காஞ்சீபுரம், திருவானைக்கா, திருவண்ணாமலை, காளஹஸ்தி, சிதம்பரம் என்னும் இவற்றின்பாடல்கள் முறையே பின்பு வைக்கப்பட்டன. அப்பாலுள்ள ஸ்தலப்பாடல்கள், தெரிந்தவளையில்,

தொண்டைநாடு, சோழநாடு முதலிய நாடுகளின் கிரமப்படி பிரித்துவைக்கப்பட்டன. இறுதியில் பொதுப்பாடல்களும், பஞ்சரத்நத்திருப்புகழ் என்று வழங்கிவரும் ஐந்துபாடல்களும் வைக்கப்பட்டன. ஒரேசந்தமானபாடல்கள் பெரும்பாலும் ஒன்றாகவைக்கப்பட்டன. பிரபலமான ஸ்தலங்களையன்றி ஏனையஸ்தலங்களுள், பலவற்றின் இருப்பிடம்முதலியவிவரங்கள், சில அன்பர்கள்மூலமாகவும் வேறுவிதமாகவும் கிடைத்தன. அவற்றை அந்தஅந்த ஸ்தலத்துப்பாடல்களின்கீழ்க்குறித்திருக்கிறேன். சிலவற்றின் இருப்பிடம், என்ன முயற்சிசெய்தும் இன்னும் தெரியவேயில்லை. பாடல்களில் அவசியமான இடங்களில குறிப்புக்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

முதலில், ஓலைப்புத்தகங்களிலுள்ளபாடல்களைக் கடிதத்திற் பெயர்த்து எழுதியும், திருத்தியானபின்பு அவைகளை வேறுகடிதங்களில் எழுதியும், உதவிபுரிந்த நண்பர்களுக்கும், இன்னும், இப்புத்தகம் அச்சுக்கு வருவதற்குவேண்டிய பல்விதமான உதவிபுரிந்த அன்பர்களுக்கும் மனப்பூர்வமாக வந்தனஞ்செய்கின்றேன்.

திருப்புகழ் அச்சிடவேண்டும் என்று பிரதிகள் சம்பாதிக்கத் தொடங்கினதுமுதல் இதுவரையில் எனக்குண்டாயிருந்த பிரயாஸம் மிகஅதிகமே. திருப்புகழ் அச்சிடப்பட்டு வெளிவரவேண்டும், அதை அன்பர்கள் வாசித்து ஆனந்தமடையவேண்டும் என்னும் ஆசையே இவ்வளவு பிரயாசத்திற்குங் காரணமாயிருந்தது. என் ஆசையை இவ்வளவு காலத்துக்குப் பின்பேனும் முருகப்பிரான் ஒருவாறு நிறைவேற்றுவித்தது அவருடைய பெருங்கருணையே.

முருகக்கடவுளுடைய அனுக்கிரகத்தினால யாவருக்கும் க்ஷேமம் உண்டாகுக.

---

திருத்தணிகைப் பெருமான் திருவடிவாழ்க.

---

சேகரமான ஆயிரத்திருநூறு பாடல்களையும் அச்சிட்டு
முடிந்தபின்பு ஒரேபுத்தகமாக்கி வெளிப்படுத்த உத்தேசித்
திருந்தேன். அச்சிடத்தொடங்கி இரண்டுவருஷகாலமாகியும்,
பலவித அசந்தர்ப்பத்தால், இதுவரையில் அறுநூறு பாடல்
களே அச்சிட்டு முடிந்தன. மற்றை அறுநூறு பாடல்களை
யும் அச்சிட்டுமுடிக்க எப்படியும் இன்னும் இரண்டுவருஷம்
செலலும். அவ்வளவுகாலம் புத்தகத்தை வெளிப்படுத்தாம
லிருப்பது யுக்தமாகத் தோற்றவில்லை. இதனை அச்சிடத்
தொடங்கினபின்பு அச்சிடும்விஷயத்தில் சென்னையில் என
க்கு உதவி புரிந்துவந்த ம-ள-ள-ஸ்ரீ தணிகாசல நாயகரும்,
திருப்புகழ்ப்பாடல்களைச் சீர்திருத்தி ஒழுங்குபடுத்தின திருப்
பாதிரிப்புலியூர் ம-ள-ள-ஸ்ரீ சிவசிதம்பரமுதலியார் அவர்க
ளும் சிவபதமடைந்தார்கள். முதலியார் அவர்கள், தாம்எவ்
வளவோ பிரயாசப்பட்டுச் சரிப்படுத்திய திருப்புகழ்ப் பாடல்
கள் அச்சிறப்பித்து முடிகிறவரையில் இருந்து அச்சுப்புத்
தகத்தைக்கண்டு களிக்காமல் காலஞ்செய்ததைப்பற்றி மிக
வும் வியசனப்படுகிறேன். இக்காரணங்களாலும், அன்பர்கள்
அநேகர் திருப்புகழ் எப்பொழுது வெளிப்படுமோ என்று
ஆவலாய் எதிர்பார்த்துக்கொண்டிருப்பதாலும், இனித்
தாழ்க்கலாகாதென்றெண்ணி ஆனவரையில் உடனே வெளிப்
படுத்துவது உசிதமென்று நிர்மாணித்தேன். முருகக்கடவுளு
டைய ஆறுபடைவீடுகளாகிய திருப்பரங்குன்றம், திருச்செந்
தூர், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்
சோலை, இவைகளின் பாடல்களும், பஞ்சபூத ஸ்தலங்களா
கிய காஞ்சீபுரம், திருவானைக்கா, திருவண்ணாமலை, காளஹஸ்தி,
சிதம்பரம், இவைகளின் பாடல்களும் சேர்ந்து ௬௦௩-பாடல
களாகின்றன. இவ்வறுநூற்று மூன்று பாடல்களையும் இப்
போது முதற்பாகமாக வெளிப்படுத்தி யிருக்கின்றேன். மற்
றைஸ்தலங்களின் பாடல்களும பொதுப்பாடல்களும் சேர்
ந்து அறுநூறு பாடல்களாகும: அவற்றை இரண்டாம் பாக
மாக விரைவில வெளிப்படுத்த முயலுகிறேன். ஆறுமுகக்
கடவுள் அநுக்கிரகிப்பாராக.

தஞ்சாவூர்ஜில்லா,<br>
திருத்துருப்பூண்டி:<br>
ஜய௵ ஆவணி௴<br>
1894௵<br>
செப்டம்பர்௴

வ. த. சுப்பிரமணியபிள்ளை.

---

சிவமயம்.

வெற்றிவேல் உற்றதுணை.

# அருணகிரிநாதசுவாமிகள்

## சரித்திரச்சுருக்கம்.

---

இம்மகானுபாவர் நினைக்கமுத்தியளிக்குந் திவ்வியக்ஷேத்திரமாகிய திருவண்ணாமலையிலே அவதரித்தவர். இவர் பிரபுடதேவ மகாராஜாகாலத்தில் இருந்ததாகச்சொல்லப்படுவதாலும், அவ்வரசன் இங்கிலீஷ்வருஷம் 1450ல் ஆண்டதாக ஏற்படுவதாலும், இவர் ஏறக்குறைய 445வருஷங்களுக்குமுன் இருந்திருக்கவேண்டும். இவர் பாலியத்தில சிற்றின்பத்தில்மூழ்கியிருந்து அதனால் அதிகத்துன்புற்று, பின்பு முருகக்கடவுளுடைய அநுக்கிரகத்தினாலே அத்துன்பங்கள் நீங்கி, மெய்ஞ்ஞானோபதேசம்பெற்று, அதிமதுரமும் அற்புதமுமான பாடல்களினாலே அக்கடவுளுடைய திருப்புகழைத்துதித்தார் என்பது இவர்பாடல்களினாலேயே நன்கு விளங்குகின்றது.

திருஞானசம்பந்தசுவாமிகள்முதலிய சைவசமயாசாரியர்கள் எப்படிச் சிவஸ்தலங்கள்தோறும்சென்று தேவாரதிருவாசகங்களைப்பாடினார்களோ அப்படியே அருணகிரிநாதசுவாமிகளும் சிவஸ்தலங்களுக்கும் சுப்பிரமண்ணியக்ஷேத்திரங்களுக்கும்சென்று அங்குவீற்றிருக்கும் சுப்பிரமணியக்கடவுளைப்பாடிவந்தார். அப்பாடல்களுக்குத் திருப்புகழ் என்ம்பெயர் உண்டாயிற்று. சுவாமிகள்பாடிய திருப்புகழ்ப்பாடல்கள் பதினாறாயிரமென்று *ஆன்றோர் கூறியிருக்கின்றனர். அவைகளில் இக்காலத்தில் ஓராயிரமேனும் ஒருங்கு கிடைப்பது அரிதாயிருக்கிறது. இவருடைய அதிஅற்புதமான

---

* வரகவி மார்க்கசகாயதேவர் அருளிச்செய்த திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், காப்புப்பருவம் ௧0-வது செய்யுள்:—

"அம்மை முலையுண்டு விளையாடும் இளையோனை எமை யாட்கொண்ட குமரேசனை, செம்மையுள ஆறுமுகனைத் திருவிரிஞ்சை வருசேயைப் புரந்தருள்கவே, மும்மை மலமகலக் கீரமுனி சொன்ன திரு முருகாற்றெனுந் தேறலும், எம்மருணகிரிநாத ரோதுபதி னாறாயிரந் திருப்புக ழமுதமே."

வாக்குவல்லபத்துக்கு,

> "வாக்கிற் கருணகிரி வாதவூரார் கனிவில்
> தாக்கிற் றிருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
> நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனூர்
> சொற்குறுதிக் கப்பரெனச் சொல்"

என்னும் பாடலே சான்ரும். இவர் வாக்கின பிரபாவத்தைப் பற்றியன்றே அதைக் 'கடல்மடைதிறந்த வெள்ளம்' என்றும் கூறுகின்றனர்.

அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த மற்றைநூல்கள திருவதுப்பு, கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரனுபூதி என்பவைகளாம். கந்தரந்தாதி, சுவாமிகள் வில்லிபுத்தூராருடன தர்க்கஞ்செய்தகாலத்தில் பாடப்பட்டதென்றும், அதற்கு உரை அவ்வில்லிபுத்தூராரே செய்தனரென்றும், அதில் *"திதத்த" என்று தொடங்கும் நிசவது செய்யுளுக்கு அவர் உரைசெய்யமாட்டாமல் திகைத்துத் தோல்வியுற்றனரென்றும், அதற்குச் சுவாமிகளே உரையருளிச்செய்தனரென்றும், பின்பு மற்றைப்பாடல்களுக்கு வில்லிபுத்தூராரே உரைசெய்து முடித்தனரென்றும, ஆன்ரேர் கூறியிருக்கின்றனர்.

சுவாமிகளுடையபாடல்கள் அதிஅற்புதமான வாக்காயிருப்பதன்றி, பொருளமைவிலும் மிகச்சிறந்தனவாக இருக்கின்றன. அவைகளிலடங்கியிருக்கும் விசேஷார்த்தங்கள் தெளிந்த ஞானிகளுக்கேயன்றி நமபோற் சாதாரணமானவர்களுக்குப் புலப்படுவதுகஷ்டம. மகானுகிய தாயுமான சுவாமிகள் அவைகளைக்கண்டுணர்ந்தன்ரே,

> "ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
> மெய்யாக வோர்சொல் விளம்பினர்யார்—வையகத்தோர்
> சாற்றரிதென் றேசற்ருர் தன்னையாய் முக்கணெந்தை
> காற்றிசைக்குங் கைகாட்டினுன்"

என்று வியந்து கூறியிருக்கின்றனர்.

வேலுமயிலுந் துணை.

---

* "திதத்தத்தத்தித்தத் திதிதாதைதாத துத்தித்தத்திதா
திதத்தத்தத்தித்த திதித்தித்த தேதுத்து தித்தித்ததா
திதத்தத்தத்தித்தத்தை தாததிதேதுதை தாததத்து
திதத்தத்தத்தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே."

உ

சிவமயம்.

முருகக்கடவுள் துணை.

# திருப்புகழ்ச்சிறப்புப்பாயிரம்.



## நூற்சிறப்பு.

### நேரிசைவெண்பா.

எல்லாரு ஞானந் தெளிஞரோ கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ—பொல்லாத
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி. (௧)



திருப்புகழ்ச் சிரவணத்தால் வேதார்த்தாதி அனைத்தும் அறியலாம் ஆதலால் அதனையே கேட்க என்றது.

வேதம்வேண் டாம்*சகல வித்தைவேண் டாம்கீத
நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டாமே—ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்தாள் போற்றும்
திருப்புகழைக் கேளீர் தினம். (௨)

---

## நூற்பயன்.

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம்அரசாள் வரம்பெறலாம்—மோனவீ
டேறலாம் யானைக்கிளையான் திருப்புகழைக்
கூறினர்க் காமேயிக் கூறு. (௩)

---

* சகலவித்தை=அறுபத்து நான்கு கலைஞானங்கள்.

ஆறுமுகந் தோன்றும் அழகியவேல் தோன்றுமவன்
ஏறுமயில் தோன்று மெழில்தோன்றும்—சீறிவரு
சூரன் முடியைத் துணித்தோன் திருப்புகழைப
பாரில் வழுத்தினோர் பால். (௪)

---

அன்பர்வினவ ஆண்டவன் விடையருளியதாக மேலையதை வற்புறுத்தியது.

கலிவிருத்தம்.

பொருப்பது பொடிப்பட விடுத்திடு கைவேலா
இருபபிட முனக்கெது எனக்கரு ளியம்பாய;
உருக்ககல் விழுக்குல மொழுகமில ரேனும்
திருப்புகழ் படிபபவர் மனத்தினி விருப்பாம். (௫)

---

அங்ஙனம் அருளக்கேட்ட அன்பர் ஆண்டவனைநோக்கிக் கூறியதாகத் திருப்புகழ் படிப்போர் திறங்கூறியது.

திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலுவாலே
ஒருத்தனை மதிபபதிலை யுன்றனருளாலே
பொருபபுக மிகபபொருது வென்றுமயில்மீதே
தரித்தொரு திருத்தணியில் நின்றபெருமானே. (௬)

---

நூலாசிரியர் பெயரோடு நூற்பண்பும் பெயரும் உணர்த்தி அதனைத்துதிப்போர் பேறுங்கூறியது.

வெண்பா.

ஓராறு மாமுகனும் உச்சிதமெய்ஞ் ஞானகுருகன்
பேரா லருணகிரி பேருலகில்—சீராரும்
தோத்திரம தாகத் துதிககுந திருப்புகழை
ஏத்தினவ ரீடேறு வார். (௭)

---

திருப்புகழ் இன்ன இன்னதற்கு இன்ன இன்னதாய் எனல்.

அருணகிரி நாதர்பதி னாறு யிரமென்
றுரைசெய் திருப்புகழை யோதீர்—பரகதிக்கஃ
தேணி யருட்கடலுக் கேற்ற மனத்தளர்ச்சிக்
காணி பிறவிக் கரம். (௮)

---

திருப்புகழ் வழிபாட்டால் கூற்றையும் வெல்லலாம் எனக்கேடி பெற உரைத்தது.

திருப்புகழைக் கற்கத் திருப்புகழைக் கேட்கத்
திருப்புகழை நித்தஞ் செபிக்கத்—திருப்புகழை
அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே கூற்றைவென்று
கொர்ச்சிக்க லாமே கெடீ. (கூ)

திருப்புகழ்ச் சிறப்புப்பாயிரம்

முற்றிற்று.

---

இப்பாயிரம், பூர்வத்துள்ள அபியுக்தர்களாற் செய்யப்பட்டு புராதன பிரதிகளில் எழுதி வழங்கிவருவது.

---

# திருஅருணை முருகக்கடவுள் துதி.

## ஆசிரியவிருத்தம்.

ஏறுமயிலேறிவிளை யாடுமுகமொன்றே,
ஈசருடன்ஞானமொழி பேசுமுகமொன்றே,
கூறுமடியார்கள்வினை தீர்க்குமுகமொன்றே,
குன்றுருவவேல்வாங்கி நின்றமுகமொன்றே,
மாறுபடுசூரரை வதைத்தமுகமொன்றே,
வள்ளியைமணம்புணர வந்தமுகமொன்றே,
ஆறுமுகமானபொருள் நீயருளல்வேண்டும்
ஆதியருணாசல மமர்ந்தபெருமாளே.

---

வேலுமயிலுந்துணை.

உ

கணபதிதுணை.

திருத்தணிகேசன் துணை.

சிவமயம்.

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்.

---

## விநாயகர்துதி.

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணிக்-
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்;
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை-
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே;
முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே-
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா;
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி-
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.(க)

## இதன் முடிபு.

கரிமுகன் அடிபேணி...அடியவர் புத்தியிலுறைபவ! கற்பகம்! என, வினை...கெடும். (ஆதலால் யான்) ... அரன் மகன்.... மதயானை (ஆகிய)மத்தளவயிறனை, உத்தமிபுதல்வனை...மலர்கொடுபணிவேன்· (என்செய்து, எதன்பொருட்டுப் பணிவேன் எனில்)...முதல்வோனே! ...அதிதீரா! ...பெருமானே! (எனத்துதிசெய்து, எடுத்துக் கொண்ட துதிநூலாகிய இப்பிரபந்தம் இடையூறின்றி யினிது முடிதற்பொருட்டுப் பணிவேன் என்க.)

---

*உம்பர்தருத் தேனுமணிக் கசிவாகி-
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி;
இன்பரசத் தேபருகிப் பலகாலும்-
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே;
தம்பிதனக் காகவனத் தணைவோனே-
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே;
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே-
ஐந்துகரத் தானைமுகப் பெருமானே. (௨)

பக்கரைவி சித்ரமணி பொற்கலணை யிட்டநடை
பக்ஷியெனு முக்ரதுர கமுநீபப-
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்;
திக்கதும திக்கவரு குக்குடமும் ரக்ஷைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்-
செப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
செப்பெனஎ னக்கருள்கை மறவேனே;

---

* உம்பர்தரு=சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம, கற்பகம் என்னும் ஐவகைத்தெய்வத விருக்ஷங்கள். தேனு=காம தேனு என்னும் தெய்வப்பசு. மணி=சிந்தாமணியென்னும் தெய்வத ரத்நம். இம்மூன்றும் தம்மையடைந்தோர்க்கு அவர்கள்விரும்பிய பொருள்களைத் தரவல்லன.

இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
எட்பொரிய வற்றுவரை யிளநீர்*வண்-
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்;
மிக்கஅடி சிற்கடலை பட்சணமெ னக்கொளொரு
விக்கினச மர்த்தனெனு மருளாழி-
வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்
வித்தகம ருப்புடைய பெருமாளே. (௩)

விடமடைசு வேலை யமரர்படை சூலம்
விசையன்விடு பாண மெனவேதான்-
விழியுமதி பார விதமுமுடை மாதர்
வினையின்விளை வேது மறியாதே;
கடிபுலவு பாயல் பகலிரவெ னாது
கலவிதனில் மூழ்கி வறிதாய-
கயவனறி வீன னிவனுமுயர் நீடு
கழலிணைகள் சேர அருள்வாயே;
இடையர்சிறு பாலை திருடிகொடு போக
இறைவன்மகள் வாய்மை யறியாதே-
இதயமிக வாடி யுடையபிளை நாத
கணபதியெ னுமை முறைகூற;
அடையலவ ராவி வெருவஅடி கூர
அசலுமறி யாம லவரோட-
அகல்வதென டாசொ லெனவுமுடி சாட்
அறிவருளும் ஆனை முகவோனே. (௪)

நினது திருவடி சத்திமயிற்கொடி
நினைவு கருதிடு புத்திகொடுத்திட
நிறையஅமுதுசெய் முப்பழமப்பமும் நிகழ்பால்தேன்-

* வண்டு எச்சில் = தேன்.

நெடிய வளைமுறி யிக்கொடு லட்டுகம்
நிறவி லரிசிப ருப்பவ லெட்பொரி
நிகரி லினிகத லிக்கனி வர்க்கமு மிளநீரும்;

மனது மகிழ்வொடு தொட்டக ரத்தொரு
மகர சலநிதி வைத்தது திக்கர
வளரு கரிமுக வொற்றைம ருப்பனை வலமாக-

மருவு மலர்புனை *தொத்திர சொற்கொடு
வளர்கை குழைபிடி †தொப்பண குட்டொடு
வனச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே;

தெனன தெனதென தெத்தென னப்பல
‡சிறிய அறுபத மொய்த்துதி ரப்புனல்
திரளு முறுசதை பித்தநி ணக்குடல் செறிமூளை-

செரும வுதரநி ரப்புசெ ருக்குட
னிணைய வரவநி றைத்தக ளத்திடை
திமித திமிதிமி மத்தளி டக்கைகள் செகசேசே;

எனவெ துகுதுகு துத்தென வொத்துகள்
துடிக ளிடிமிக வொத்துமு ழக்கிட
டிமுட டிமுடிமு டிட்டிமெ னத்தவி லெழுமோசை-

இகலி யலகைகள் கைப்பறை கொட்டிட
இரண பயிரவி சுற்றுந டித்திட
எதிரும்நிசிசர னைப்பெலி யிட்டருள்பெருமாளே.(௫)

---

*தொத்திர சொற்கொடு=தோத்திரசொல் கொண்டு.
†தொப்பணம்=தோப்பணம், தோப்புக்கரணம்,
‡சிறியஅறுபதம்=ஈ.

சிவமயம்.

# திருப்புகழ்.

## நூல்.

1. முத்தைத்தரு பத்தித்திருநகை
*அத்திக்கிறை சத்திச்சரவண
முத்திக்கொரு வித்துக்குருபர எனவோதும்-
முக்கட்பர மற்குச் †சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத்தமரு மடிபேணப்;
பத்துத்தலை தத்தக்கணை ¶தொடு
ஒற்றைக்**கிரி மத்தைப்பொருதொரு
பட்டப்பகல் வட்டத்திகிரியி லிரவாகப்-
††பத்தற்கிர தத்தைக்கடவிய
‡‡பச்சைப்புயல் மெச்சத்தகுபொருள்
பக்ஷத்தொடுரக்ஷித்தருள்வதுமொருநாளே;
தித்தித்தெய வொத்தப்பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப்பயிரவி
திக்கொட்கந டிக்கக்கழுகொடு கழுதாடத்-

'முத்தைத்தரு' என்னும் இச்செய்யுள் அருணகிரிநாதர் ஆதியில் அருளிச்செய்ததாக ஆன்றோர் வரைந்து வழங்கிவருதலின் முதலில் வைக்கப்பட்டது.

*அத்தி=தெய்வயானை. †சுருதியின்முற்பட்டது=பிரணவம்.

‡இருவர்=பிரமவிஷ்ணுக்கள்.

¶தொட்டு எனற்பாலது தொடு எனத்தொகுக்கப்பட்டது.

**கிரிமத்தைப் பொருது = மந்தரகிரியாகியமத்தைக் கொண்டு (திருப்பாற்கடலைக்) கடைந்து.

††பத்தன்=அருச்சுனன். ‡‡பச்சைப்புயல்=விஷ்ணு.

திக்குப்பரி அட்டப்பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத்தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத்ரிகடக எனவோதக்;
கொத்துப்பறை கொட்டக்களமிசை
குக்குக்குகு குக்குக்குகுகுகு
குத்திப்புதை புக்குப்பிடியென முதுகூகை-
கொட்புற்றெழ நட்பற்றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக்குலகிரி
குத்துப்படவொத்துப்பொரவல பெருமாளே.

### இதன்முடிபு

அத்திக்கிறை! .. சரவண! ...குருபர! எனவோதும் பரமர்க்கு...கற்பித்து, இருவரும்...அமரரும் அடிபேண, ...பயிரவி நடிக்க, ...கழுதாட, ...அட்டபயிரவர்...ஓத, பறைகொட்ட, ..கூகை புக்குப்பிடியென, ...அவுணரைவெட்டிப் பலியிட்டு, ...கிரிகுத்துப்பட ...பொரவலபெருமாளே! ...தலைதத்தக் கணைதொட்டு, . .கிரிமதத்தைடபொருது, ...பகல்.. இரவாக...இரதத்தைக்கடவிய பரமைப்பயக்கு மெச்சத்தகு பொருளே! (நீ எளியேனை) இரக்ஷித்தருளும் தர்மம் (உளதோ?)

## முருகக்கடவுளின் முக்கியதிருப்பதிகள் ஆறனுள்

முதலாவது

## திருப்பரங்குன்றம்.

2. கருவடைந்து பத்துற்றதிங்கள்
வயிறிருந்து முற்றிப்பயின்று
கடையில்வந்து தித்துக்குழந்தை வடிவாகி-
கழுவியங்கெ டுத்துச்சுரந்த
முலை*யருந்து விக்கக்கிடந்து
கதறியங்கை கொட்டித்தவழ்ந்து நடமாடி;

*அருந்துவிக்க=அருத்த=ஊட்ட.

அரைவடங்கள் கட்டிச்சதங்கை
யிடுகுதம்பை பொற்சுட்டிதண்டை
அவையணிந்து முற்றிக்கிளர்ந்து வயதேறி-
அரியபெண்கள் நட்பைப்புணர்ந்து
பிணியுழன்று சுற்றித்திரிந்த
தமையுமுன்க்ருபைச்சித்தமென்றுபெறவேனோ;
இரவியிந்த்ரன் வெற்றிக்குரங்கி
னரசரென்று மொப்பற்ற†வுந்தி
யிறைவன்‡எண்கினக்கர்த்தனென்றுமநெடுநீலன்-
எரியதென்றும் ருத்ரற்சிறந்த
அனுமனென்றும் ஒப்பற்றஅண்டா
எவருமிதவர்க்கத்தில்வந்து புனமேவ;
அரியதன்படைக்கர்த்தரென்று
அசுரர்தங்கிளைக்கட்டைவென்ற
அரிமுகுந்தன் மெச்சுற்றபண்பின் மருகோனே-
அயனையும்புடைத்துச்சினந்து
உலகமுமபடைத்துப்பரிந்து
அருள்பரங்கிரிக்குட்சிறந்த பெருமாளே. (க)

3 உனைத்தினந்தொழு திலனுனதியல்பினை
உரைத்திலன்பல மலர்கொடுனடியிணை
உறப்பணிந்தில னொருதவமிலனுன தருள்மாறு-
உளத்துளன்பின ருறைவிடமறிகிலன்
விருப்பொடுன்சிகரமும்வலம்வருகிலன்
உவப்பொடுன்புகழ்துதிசெயவிழைகிலன்மலைபோலே;
கனைத்தெழும்பகடதுபிடர்மிசைவரு
கறுத்தவெஞ்சின மறலிதனுழையினர்
கதித்தடர்ந்தெறி கயிறடுகதைகொடு பொருபோதே-

†உந்தியிறைவன்=பிரமன்.
‡எண்கினக்கர்த்தன்=கரடிமுகச் சேனைகட்குத்தளகர்த்தனாகிய அம்முசமுள்ள சாம்புவான்.

கலக்குறுஞ்செய லொழிவறஅழிவுறு
கருத்துநைந்தல முறுபொழுதளவைகொள்
கணத்திலென்பயமறமயில்முதுகினில்வருவாயே;

வினைத்தலந்தனி லலகைகள்குதிகொள
விழுக்குடைந்துமெ யுகுதசைகழுகுண
விரித்தகுஞ்சிய ரெனுமவுணரையமர் புரிவேலா-

மிகுத்தபண்பயில் குயில்மொழியழகிய
கொடிச்சிகுங்கும முலைமுகடுழுநறை
விரைத்தசந்தன ம்ருகமதபுயவரையுடையோனே;

தினத்தினஞ்சதுர் மறைமுனிமுறைகொடு
புனற்சொரிந்தலர் பொதியவிணவரொடு
சினத்தைநிந்தனை செயுமுனிவரர்தொழ மகிழ்வோனே-

தெனத்தெனந்தென எனவரியளிநறை
தெவிட்டஅன்பொடு பருகுயர்பொழில்திகழ்
திருப்பரங்கிரிதனிலுறைசரவணபெருமாளே. (உ)

4. அருக்குமங்கையர் மலரடிவருடியெ
கருத்தறிந்துபி னரைதனிலுடைதனை
அவிழ்த்துமங்குள அரசிலைதடவியு மிருதோளுற்

றணைத்துமங்கையி னடிதொறுநகமெழ
வுதட்டைமென்றுப லிடுகுறிகளுமிட
அடிக்களந்தனில் மயில்குயில்புறவென மிகவாய்விட்;

டுருக்குமங்கியின் மெழுகெனவுருகிய
சிரத்தைமிஞ்சிடு மனுபவமுறுபல
முறுக்கையின்கனி நிகரெனஇலகியமுலைமேல்வீழ்ந்

துருக்கலங்கிமெ யுருகிடவுமுதகு
பெருத்தவுந்தியின் முழுகிமெயுணர்வற
வுழைத்திடுங்கன கலவியைமகிழ்வது தவிர்வேனோ;

இருக்குமந்திர *மெழுவகைமுனிபெற
வுரைத்தசம்ப்ரம சரவணபவகுக
இதத்தஇங்கித மிலகியஅறுமுக எழில்வேளென்-

*எழுவகைமுனி=வசிஷ்டர்முதலிய சப்தரிஷிகள்.

றிலக்கணங்களு மியலிசைகளுமிக
விரிக்குமம்பல மதுரிதகவிதனை
யியற்றுசெந்தமிழ்விதமொடுபுயமிசை புனைவோனே;
செருக்குமம்பல மிசைதனிலசைவுற
நடித்தசங்கரர் வழிவழியடியவர்
திருக்குருந்தடி யருள்பெறஅருளிய குருநாதா-
திருக்குழந்தையு மெனஅவர்வழிபடு
குருக்களின்திற மெனவருபெரியவ
திருப்பரங்கிரிதனிலுறைசரவண பெருமாளே.(ரு)

5. கறுக்குமஞ்சன விழியிணைஅயில்கொடு
நெருக்கிநெஞ்சற எறிதருபொழுதொரு
கனிக்குளின்சுவையமுதுகுமொருசிறுநகையாலே-
*களக்கொழுங்கலிவலை கொடுவிசிறியெ
மனைக்கெழுநதிரு மெனமனமுருகவொர்
கவற்சிகொண்டிட மனைதனிலழகொடு கொடுபோகி;
நறைத்தபஞ்சணை மிசையினில்மனமுற
அணைத்†தகந்தனி லிணைமுலையெதிர்பொர
நகத்தழுந்திட அமுதிதழ்பருகியு மிடறூடே-
நடித்தெழுங்குரல் குமுகுமுகுமுவென
இசைத்துநன்கொடு மனமதுமறுகிட
நழுப்புகஞ்சன சிறுமிகள்துயரற அருள்வாயே;
நிறைத்ததெண்டிரை மொகுமொகுமொகுவென
வுரத்த‡கஞ்சுகி முடிநெறுநெறுவென
நிரைத்தஅண்டமு கடுகிடுகிடுவெனவரைபோலும்-
நிவத்ததிண்கழல் நிசிசரருரமொடு
சிரக்கொடுங்குவை மலைபுனைதரஇரு
நிணக்குழம்பொடு குருதிகள்சொரிதரஅடுதீரா;

*களக்கொழுங்கலி=வளமானகண்டத்தொனி.
†ஆகம் என்பது அகம் எனத்திரிந்தது. ஆகம்=மார்பு.
‡கஞ்சுகி=பாம்பு - அதாவது ஆதிசேஷன்.

திறற்கருங்குழ லுமையவளருளூறு
புழைக்கைதண்கட கயமுகமிகவுள
சிவக்கொழுந்தனகணபதியுடன்வரு மிளையோனே-
சினத்தொடுஞ்சம னுதைபடவிறுவிய
பரற்குளன்புறு புதல்வனன்மணியுரு
திருப்பரங்கிரி தனிலுறை சரவணபெருமாளே. (௪)

௫. வடத்தைமிஞ்சிய புளகிதவனமுலை
தனைத்திறந்தெதிர வருமிளைஞர்களுயிர்
மயக்கியைங்கணைமதனனையொருஅருமையினாலே-
*வருத்திவஞ்சகநினைவொடுமெலமெல
நகைத்துநண்பொடு †வருமிருமெனவுமை
வழுத்தியங்கவ ரொடுசெருவியுமுடல் தொடுபோதே,
விடத்தைவென்றிடு படைவிழிகொடுமுள
மருட்டிவண்பொருள் கவர்பொழுதினில்மயல்
விருப்பெனும்படி மடிமிசையினில்விழுதொழில்தானே-
விளைத்திடும்பல கணிகையர்தமதுபொய்
மனத்தைநம்பிய சிறியனைவெறியனை
விளைப்பதந்தனிலருள்பெறநினைகுவ துளதோதான்;
குடத்தைவென்றிரு கிரியெனஎழில்தள
தளத்தகொங்கைகள் மணிவடமணிசிறு
குறக்கரும்பின்மெய் துவள்புயனெனவருவடிவேலா-
குரைக்கருங்கடல் திருவணையெனமுனம்
அடைத்திலங்கையி னதிபதிநிசிசரர்
குலத்தொடம்படவொருகணைவிடுமரி மருகோனே;
திடத்தெதிர்ந்திடு மசுரர்களபொடிபட
அயிற்கொடும்படை விடுசரவணபவ
திறற்குகன்குருபரனெனவருமொருமுருகோனே-
செழித்ததண்டலை தொறுமிலகியகுட
வளைக்குலந்தரு தாளமுமிகுமுயர்
திருப்பரங்கிரி வளநகர்மருவியபெருமாளே. (௫)

---

*வருத்தி=வருவித்து. † வருமிரும்=வாரும் இரும்.

7 பதித்தசெஞ்சந்தப் பொற்குடமித்தம்
பருத்துயர்ந்தண்டத் திற்றலைமுட்டும்
பருப்பதந்தந்தச் செப்பவையொக்குந் தனபாரம்-
*படப்புயங்கம்பற் கக்குநடுப்பண்
செருக்குவண்டம்பப் பிற்கயலொக்கும்
பருத்தகண்கொண்டைக் கொக்குமிருட்டென்
றிளைஞோர்கள்;
துதித்துமுன்கும்பிட் டுற்றதுரைத்தன்
புவைக்கநெஞ்சஞ்சச் சிற்றிடைசுற்றுந்
துகிற்களைந்தின்பத் துர்க்கமளிக்குங் கொடியார்பால்-
துவக்குறும்பங்கப் பித்தனைவித்தன்
புவிக்குளென்சிந்தைப் புத்திமயக்கந்
துறக்கநின்தண்டைப் பத்மமெனக்கென்றருள்வாயே;
குதித்துவெண்சங்கத் தைச்சுறவெற்றுங்
கடற்கரந்தஞ்சிப் புக்கவரக்கன்
குடற்சரிந்தெஞ்சக் குத்திவிதிர்க்குங் கதிர்வேலா-
குலக்கரும்பின்சொற் றத்தையிபப்பெண்
தனக்குவஞ்சித்துப †பொச்சையிடைக்குங்
குகுக்குகுங்குக்குக் குக்குகுகுக்குங் குகுகூகூ;
திதித்திதிந்தித்தித் தித்தியெனக்கொம்
பதிர்த்துவெண்சண்டைக் கட்கம்விதிர்த்துந்
திரட்குவிந்தங்கட் பொட்டெழவெட்டுங்கொலைவேடர்-
தினைப்புனஞ்சென்றிச் சித்தபெணைக்கண்
டுருக்கரந்தங்குக் கிட்டியணைத்தோன்
திருப்பரங்குன்றிற் புக்குளிருக்கும் பெருமாளே.(எ)

8. மன்றலங்கொந்துமிசை தெந்தனந்தெந்தனென
வண்டினங்கண்டுதொடர் குழல்மாதர்-
மண்டிடுந்தொண்டையமு துண்டுகொண்டன்புமிக
வம்பிடுங்கும்பகன தனமார்பில்;

---

*படப் புயங்கம் பல்கக்கு கடு, பண்செருக்கு வண்டு, அம்பு, அப்பிற்கயல் எனப்பிரிக்க.
†பொச்சையிடை=காட்டினிடத்தில்.

ஒன்றஅம்பொன்றுவிழி கன்றஅங்கக்குழைய
உந்தியென்கின்றமடு விழுவேனை-
உன்சிலம்புங்கனக தண்டையுங்கிண்கிணியும்
ஒண்கடம்பும்புனையும் அடிசேராய்;
பன்றியங்கொம்புகம டம்புயங்கஞ்சுரர்கள்
பண்டையென்பங்கமணி பவர்சேயே-
பஞ்சரங்கொஞ்சுகிளி வந்துவந்தைந்துகர
பண்டிதன்தம்பியெனும் வயலூரா;
சென்றுமுன்குன்றவர்கள் தந்தபெண்கொண்டுவளர்
செண்பகம்பைம்பொன்மலர் செறிசோலை-
திங்களுஞ்செங்கதிரு மங்குலுந்தங்குமுயர்
தென்பரங்குன்றிலுறை பெருமாளே (எ)

9. சந்தனந் திமிர்ந்தணைந்து
குங்குமங் கடம்பிலங்கு
சண்பகஞ் செறிந்திலங்கு திரடோளும்-
தண்டையஞ் சிலம்பலம்ப
வெண்டையஞ் சலன்சலென்று
*சஞ்சிதஞ் சதங்கைகொஞ்ச மயிலேறி;
திந்திமிந் திமிந்திமிந்தி
தந்தனந தனந்தனென்று
சென்றசைந்துகந்துவந்து க்ருபையோடே-
†சிந்தையங் குலம்புகுந்து
சந்ததம் புகழ்ந்துணர்ந்து
செம்பதம் பணிந்திொன்று மொழிவாயே;
அந்தமந்தி கொண்டிலங்கை
வெந்தழிந் திடும்பகண்டன்
அங்கமுங் குலைந்தரங்கொள் பொடியாக-

---

*சஞ்சிதம்=சஞ்சுஇதம். சஞ்சு=சாயல்.
†சிந்தை அம் குலம்=மனமாகிய அழகியகோயில்.

அம்பகும் பனுங்கலங்க
வெஞ்சினம் புரிந்துநின்று
அம்புகொண்டு வென்றகொண்டல்மருகோனே;
இந்துவுங் கரந்தைதும்பை
கொன்றையுஞ் சலம்புனைந்தி
டும்பரன் சிலம்பமர்ந்த குமரேசா-
*இந்திரன் பதம்பெறணடர்
தமபயங் கடிந்துபின்பு
எங்கணுங் கமழ்ந்திருந்த பெருமாளே. (அ)

10. †எந்தன்சட லங்கம்பல பங்கம்படு தொந்தங்களை
யென்றுந்துயர் போனறும்படி யொருநாளே-
இன்பந்தரு செம்பொன்கழ லுந்துங்கழல் தந்தும்பினை
‡யென்றும்படி பந்தங்கெட மயிலேறி;
வந்தும்பிர சண்டம்பகி ரணடம்புவி யெங்குந்திசை
மண்டும்படி நின்றுஞ்சுட ரொளிபோலும்-
வஞ்சங்குடி கொண்டிங்கிரி நெஞ்சன்துக னென்றுங்கொளும்
வணடன்றமி யன்றன்பவம் ஒழியாதோ;
தந்தந்தன திந்திந்திமி யென்றும்பல சஞ்சங்கொடு
தஞ்சமபுரி கொஞ்சுஞ்சிறு மணியாரம்-
சந்தத்தொனி கண்டுமபுய லங்கன்சிவ னம்பன்பதி
சம்புதொழ நின்றுந்தினம் விளையாடும்;
கந்தகுக னென்றன்குரு வென்றுந்தொழு §மன்பன்கவி
கண்டுய்ந்திட அன்றன்பொடு வருவோனே-
கண்டின்கனி சிந்துஞ்சுவை பொங்கும்புனல் தங்கும்பொழில்
கந்தங்கொள்ப ரங்குன்றமர் பெருமாளே. (கூ)

11. சருவும்படி ¶வந்தன லிங்கித
மதனின்றிட அம்புலியுஞ்சுடு
தழல்கொண்டிட மங்கையர்கண்களின் வசமாகி-

---

* இந்திரன்பதம்பெற அண்டர்தம்பயங்கடிந்து எனப்பிரிக்க.
† எந்தன், இது என்றன் என்பதன் மரூஉ.
‡ என்றம்படி=எப்போதும்போல. § அன்பன்=நக்கீரர்.
¶வந்தனன் என்பது வந்து என்னும்பொருளைத்தரும் முற்றெச்சம்.

சயிலங்கொளு மன்றல்பொருந்திய
பொழிலின்பயில் தென்றலுமொன்றிய
தடவஞ்சுனை துன்றியெழுந்திட திரமாமோ;
இரவும்பக லந்தியுநின்றிடு
குயில்வந்திசை தெந்தெனவென்றிட
இருகண்கள் துயின்றிடலின்றியும் அயர்வாகி-
இவணெஞ்சு †பதன்பதனென்றிட
மயல்கொண்டுவ ருந்தியவஞ்சகன்
இனியுன்றன்ம லர்ந்திலகும்பதம் அடைவேனோ;
திருவொன்றிவி ளங்கியஅண்டர்கள்
மனையின்தயி ருண்டவனெண்டிசை
திகழும்புகழ் கொண்டவன்‡வண்டமிழ்பயில்வோர்பின்-
திரிகின்றவன் மஞ்சுநிறம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொள வென்றடல்
ஜெயதுங்கமு குந்தன்மகிழ்ந்தருள்மருகோனே,
மருவுங்கடல துந்துமியுங்குட
முழவங்கள்கு மின்குமினென்றிட
வளமொன்றிய செந்திலில்வந்தருள் முருகோனே-
மதியுங்கதி ருமபுய லுந்தின
மறுகும்படி அண்டமிலங்கிட
வளர்கின்றப ரங்கிரிவந்தருள் பெருமாளே (௧௦)

12. வரைத்தடங் கொங்கையாலும்
வளைப்படுஞ் செங்கையாலும்
மதர்த்திடுங் கெண்டையாலு ¶மனைவோரும்-

---

† பதனபதனென்றிட=பதைபதைக்க.
‡ வண்டமிழ்பயில்வோர்பின் திரிகின்றவன் என்றது
"கணிவண்ணன்செல்கென்றான்காமருபூங்கச்சி
மணிவண்ணாநீகிடக்கவேண்டாம்—துணிவொன்றிச்
செந்நாப்புலவோன்யான்செல்கின்றேனீயுமுன்றன்
பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள்." என்றதிருமழிசையாழ்வார் பின்சென்றதை.

¶ அனைவோரும் வடுப்படுந்தொண்டை=பலராலும் வடுப்படுத் தப்படும் கொவ்வைக்கனி யொத்த இதழ்.

வடுப்படுந் தொண்டையாலும்
விளைத்திடுங் கொண்டையாலும்
மருட்டிடுஞ் சிந்தைமாதர் வசமாகி
எரிப்படும் பஞ்சுபோல
மிகக்கெடுந் தொண்டனேனும்
*இடைப்படுந் தொந்தவாரி கரையேற-
இசைத்திடுஞ் சந்தபேத
மொழித்திடுந் தண்டைசூழும்
இணைபபதம் புண்டரீக மருள்வாயே;
சுரர்க்குவஞ் சஞ்செய்சூர
னிளக்ரவுஞ் சந்தனோடும்
துளக்கெழுந் தண்டகோள மளவாகத்-
துரத்தியன் றிந்த்ரலோக
மழித்தவன் சம்ப்ரதாயம்
சுடப்பருஞ் சண்டவேலை விடுவோனே;
செருக்கெழுந் தும்பர்சேனை
துளக்கவென் றண்டமுடுந்
தெழித்திடுஞ் சங்கபாணி மருகோனே-
தினைப்புனஞ் சென்றுலாவு
குறத்தியின் பம்பராவுந்
திருப்பரங் குன்றமேவு பெருமாளே. (கக)

பொருப்புறுங்கொங்கையர் பொருட்கவர்ந்தொன்றிய
பிணக்கிடுஞ்சண்டிகள் வஞ்சமாதர்-
†புயற்குழன்றங்கமழ் அறற்குலந்தங்கவிர்
முருக்குவண்செந்துவர் தந்துபோகம்:
அருத்திடுஞ்சிங்கியர் தருக்கிடுஞ்செங்கய
லறச்சிவந்தங்‡கையி லன்புமேவும்-
அவர்க்குழன்றங்கமு மறத்தளர்ந்தென்பய
னருட்பதம்பங்கய மன்புறுதோ;

---

*இடைப்படுந்தொந்தவாரி=துன்பப்படுகின்றவினைத்தொடர்புள்ள கடல்.
†புயல்குழன்றஅம்கமழ் எனப்பிரிக்க. ‡கையில்=கைப்பொருளில்.

மிருத்தனும்பங்கய னலர்க்கணன்சங்கரர்
விதித்*தெனுங்கும்பிடு கந்தவேளே.
மிகுத்திடும்வன்சம ணரைப்பெருந்திண்கழு
மிசைக்கிடுஞ்செந்தமி ழாகரனயா;
செருக்குதண்சண்பக வனத்திடங்கொங்கொடு
திறற்செழுஞ்சந்தகில் துன்றிநீடு-
தினைப்புனம்பைங்கொடி தனத்துடன்சென்றணை
திருப்பரங்குன்றுறை தம்பிரானே. (கஉ)

14. தடக்கைப்பங்கயங் கொடைக்குக்கொண்டல்தண்
டமிழ்க்குத்தஞ்சமென் றுலகோரைத்-
தவித்துச்சென்றிரந் துளத்திற்புண்படுந்
தளர்ச்சிப்பம்பரந் தனையூசற்;
கடத்தைத்துன்பமண் சடத்தைத்துஞ்சிடுங்
கலத்தைப்பஞ்சஇந் த்ரியவாழ்வைக்-
கணத்திற்சென்றிடந் திருத்தித்தண்டையங்
கழற்குத்தொண்டுகொண் டருள்வாயே;
படைக்கப்பங்கயன் துடைக்கச்சங்கரன்
புரக்கக்கஞ்சைமன் பணியாகப்-
பணித்துத்தம்பயந் தணித்துச்சந்ததம்
பரத்தைக்கொண்டிடுந் தனிவேலா;
குடக்குத்தென்பரம் பொருப்பிற்றங்குமங்
குலத்திற்கங்கைதன் சிறியோனே-
குறப்பொற்கொம்பைமுன் புனத்திற்செங்கரங்
குவித்துக்கும்பிடும் பெருமாளே. (கங)

15. சந்ததம்பந்தத் தொடராலே-
சஞ்சலந்துஞ்சித் திரியாதே;
கந்தனென்றென்றுற் றனைநாளும்-
கண்டுகொண்டன்புற் றிடுவேனோ;
†தந்தியின்கொம்பைப் புணர்வோனே-
சங்கரன்பங்கிற் சிவைபாலா;
செந்திலங்கண்டிக் கதிர்வேலா-
தென்பரங்குன்றிற் பெருமாளே. (கச)

---

*என்றும் என்பது எனும் எனமரீஇத் தொகுத்தல் விகாரமுற்றது.
†தந்தியின்கொம்பு = தெய்வயானை.

இரண்டாவது

திருச்சீரலைவாய் என்கின்ற

## திருச்செந்தூர்.

---

16. கமலமாதுட னிந்திரையுஞ்சரி
சொலவொணாதம டந்தையர்சாதன
களபசீதள கொங்கையிலங்கையி லிருபோதேய்-
களவுநூல்தெரி வஞ்சனையஞ்சன
விழியில்மோகித கந்தசுகந்தரு
கரியவோதியி லிந்துமுகந்தனில் மருளாதே;
அமலமாகிய சிந்தையடைந்தகல்
தொலைவிலாதஅ றம்பொருளின்பமு
மடையவோதியு ணர்ந்துதணந்தபின்அருள்தானே-
அறியுமாறுபெ றும்படியன்பினி
னினியநாதசி லம்புபுலம்பிடு
மருணஆடக கிண்கிணிதங்கிய அடிதாராய்;
குமரிகாளிப யங்கரிசங்கரி
கவுரிநீலிப ரம்பரையம்பிகை
குடிலையோகினி சண்டினிகுண்டலி எமதாயி-
குறைவிலாளுமை மந்தரியந்தரி
வெகுவிதாகம சுந்தரிதந்தருள்
குமரமூஷிக முந்தியஐங்கர கணராயன்;
மமவிநாயக னஞ்சுமிழ்கஞ்சுகி
அணிகஜானன விம்பனொரம்புலி
மவுலியானுறு சிந்தையுகந்தரு ளிளையோனே-
வளரும்வாழையு மஞ்சளுமிஞ்சியும்
இடைவிடாது நெருங்கியமங்கல
மகிமைமாநகர் செந்திலில்வந்துறை பெருமானே. (க)

17. அளகபாரம லைந்துகுலைந்திட
வதனம்வேர்வுது லங்கிநலங்கிட
அவசமோகம்வி ளைந்துதளைந்திட அணைமீதே-

அருணவாய்நகை சிந்தியசம்ப்ரம
அடர்நகாநுதி பங்கவிதஞ்செய்து
அதரபானம ருந்திமருங்கிற மூலமேல்வீழ்;

துளமும்வேறுப டும்படியொன்றிடு
மகளிர்தோதக இன்பின்முயங்குத
லொழியுமாறுதெ ளிந்துளமன்பொடு சிவயோகத-

துருகுஞானப ரம்பரதந்திர
அறிவினோர்கரு தங்கொள்சிலம்பணி
உபயசீதள பங்கயமென்கழல் தருவாயே;

இளகிடாவளர் சந்தனகுங்கும
களபபூரண கொங்கைநலம்புனை
யிரதிவேள்பணி தந்தையும்அந்தணமறையோனும்-

இனிதுறுதெதி ரிந்திரனண்டரும்
அரஹராசிவ சங்கரசங்கர
எனமிகாவரு நஞ்சினையுண்டவ ரருள்பால;

வளர்பிசாசரர் தங்கள்சிரம்பொடி
படவிரோதமி டுங்குலசம்பரமன்
மகரவாரிக டைந்தநெடும்புயல மருகோனே-

வளரும்வாழையு மஞ்சளுமிஞ்சிபும
இடைவிடாதுநெ ருங்கியமங்கல
மகிமைமாநகர்செந்திலில்வந்துறைபெருமானே. (உ)

18. பஞ்சபாதக முறுபிறையெயிறெரி
குஞ்சிகூர்விட மதர்விழிபிலவக
பங்கவாண்முக முடுகியநெடுகிய திரிசூலம-

பந்தபாசமு மருவியகரதல
மிஞ்சிநீடிய கருமுகிலுருவொடு
பண்பிலாதொரு பகடதுமுதுகினில்யமராஜன்;

அஞ்சவேவருமவதரமதிலொரு
தஞ்சமாகியெ வழிவழியருள்பெறும்
அன்பினாலுன தடிபுகழடிமையெ னெதிரோரீ-

அண்டகோளகை வெடிபடஇடிபட
எண்டிசாமுக மடமடமடமிடும்;
அநதமோகர மயிலினிலியலுடன் வரவேணும்;

மஞ்சுபோல்வள ரளகமுமிளகிய
ரஞ்சிதாம்ருத வசனமுநிலவென
வநததூயவெண் முறுவலுமிருகுழை யளவோடும்.

மன்றல்வாரிச நயனமுமழகிய
குன்றவாணர்த மடமகள்தடமுலை
மந்தராசல மிசைதுயிலழகிய மணவாளா;

செஞ்சொல்மாதிசை வடதிசைகுடதிசை
விஞ்சுகீழ்திசை சகலமுமிகலசெய்து
திங்கள்வேணியர் பலதளிதொழுதுயர் மகமேரு-

செண்டுமோதின ரரசருளதிபதி
தொண்டராதியும் வழிவழிநெறிபெறு
செந்தில்மாநகரினிதுறையமரர்கள் பெருமாளே ()

19. *அமுதஉததிவிடமுமிழு செங்கட்டிங்கட்
பகவினொளிர்வெளெயிறு துஞ்சற்குஞ்சித்
தலையுமுடையவனரவ தண்டச்சண்டச்
சமனோலை-

அதுவருகுமளவிலுயி ரங்கிட்டிங்குப்
பறைதிமிலைதிமிதமிகு†தம்பட்டம்பற்
கரைபவுறவினரலை வந்திச்சந்தித்
தெருவூடே;

எமதுபொருளெனுமருளை யின்றிக்குன்றிப்
பிளவளவுதினையளவு பங்கிட்டுண்கைக்
கிளையுமுதவசைதவிர இன்றைக்கன்றைக்
கெனநாடா-

திடுககடிதெனுமுணர்வு பொன்றிக்கொண்டிட்
டுடுடுடுடுடுடுடுடு டுண்டுட்டுண்டுட்
டெனவுகளுநெறிகருதி நெஞ்சத்தஞ்சிப்
பகிராதோ;

---

*அமுதததி=அமுத+உததி=திருப்பாற்கடல்.
†தம்பட்டம்பல்கரைய=தம்பட்டம் முதலிய பலவாத்தியங்கள் சப்திக்க.

குமுதபதிவகிரமுது சிந்தச்சிந்தச்
சரணபரிபுரசுருதி கொஞ்சக்கொஞ்சக்
குடிலசடைபவுரிகொடு தொங்கப்பங்கிற்
கொடியாட-
குல *தடினிஅசையஇசை பொங்கப்பொங்கக்
கழலதிரடெகுடெ குடடெங்கட்டெங்கத்
தொகுகுகுகுதொகுகுகுகு தொங்கத்தொங்கத்
தொகுதீதோ;
திமிதமெனமுழவொலிமு ழங்கச்செங்கைத்
தமருகமததிர்சதியொ டன்பர்க்கின்பத்
திறமுதவுபரதகுரு வந்திக்குஞ்சற்
குருநாதா-
திரளுமணிதாளமுயர் தெங்கிற்றங்கிப்
புரளஎறிதிரைமகர சங்கத்துங்கத்
திமிரசலநிதிதழுவு செந்திற்கந்தப்
பெருமாளே (ச)

20 கொடியனையஇடைதுவள அங்கமும்பொங்கஅங்
குமுதஅமுதிதழ்பருகி யின்புறுஞ்சங்கையன்
குலவியனைமுகில்ளக முஞ்சரிந்தன்பினின்
பண்புலாவக்-
கொடியவிரல்கநுதியில் புண்படுஞ்சஞ்சலன்
‡ குனகியவருடனினிது சம்ப்ரமங்கொண்டுளங்
குரல்மூயஅவசமுறு குங்குணன்கொங்கவிழ்ந்
தொன்றுபாய்மேல்;
விடமனையவிழிமகளிர் கொங்கையின்பன்புறும
வினையனியல்பரவுமுயிர் வெந்தழிந்தங்கமும்
மிதமொழியஅறிவிலநெறி பண்பிலண்டுஞ்சகன்
செஞ்செநீடும்-
வெகுகனகவொளிகுலவும் அந்தமன்செந்திலென்
றவிழவுளமுருகிவரு மன்பிலன் †தந்திலன்
விரவுமிருசிறுகமலபங்கயந்தந்துகந் தன்புறுதோ;
படமிலகுமரவினுட லங்கமும்பங்கிடந்
துதறுமொருகலபமிசை வந்தெழுந்தண்டர்தம்
பகையசுரனைவருடல் சந்துசந்துங்கதஞ்
சிந்தும்வேலா-

* தடினி=ஆறு. குலதடினி=சிரேஷ்டமான கங்கையாறு.
† தந்திலன் = சாஸ்திர ஆராய்ச்சியில்லாதவன்.

படியவருமிமையவரும் நின்றிறைஞ்செண்குணன்
பழையஇறையுருவமிலி யன்பர்பங்கன்பெரும்
பருவரல்செய்புரமெரிய விண்டிடுஞ்செங்கணன்;
கங்கைமான்வாழ்;

சடிலமிசையழகுபுனைகொன்றையுர்பண்புறும் [ண்
தருணமதியினகுறைசெய் துண்டமுஞ்செங்கையோ
சகலபுவனமுமொழிக தங்குறங்கங்கியும்
பொங்கிநீடும்-

சடமருவுவிடையரவர் தங்கஅம்பங்கினின்
றுலகுதருகவுரியுமை கொங்கைதந்தன்புறும்
தமிழ்விரகவுயர்பரம சங்கரன்கும்பிடுந்
தம்பிரானே. (ரு)

21. அறிவழியமயல்பெருக வுரையுமறவிழிசுழல
அனலவியமலமொழுக அகலாதே-
அனையுமனையருகிலுற வெருவியழவுறவுமழ
அழலினிகர்மறலிபெனை யழையாதே;
செறியுமிருவினைகரண மருவுபுலனொழியவுயர்
திருவடியிலணுகவர மருள்வாயே-
சிவனைநிகர்பொதியவரை முனிவனகமகிழஇரு
செவிகுளிரஇனியதமிழ் பகர்வோனே:
நெறிதவறியலரிமதி நடுவன்மகபதிமுளரி
கிருதிநிதிபதிகரிய வனமாலி-
நிலவுமறையவனிவர்க ளலையஅரசுரிமைபுரி
நிருதனுரமறஅயிலை விடுவோனே;
மறிபரசுகரமிலகு பரமனுமையிருவிழியு
மகிழமடிமிசைவளரு மிளையோனே-
*மதலைதவழுததியிடை வருதரளமணிபுளின
மறையவுயர்கரையிலுறை பெருமாளே. (சு)

* மதலை—மரக்கலம்.

22. கரிக்கொம்பந் தனித்தங்கங்
குடத்தின்பந் தனத்தின்கண்
கறுப்புந்தன் சிவப்புஞ்செம் பொறிதோள்சேர்-

கணைக்கும்பண் டிழைக்கும்பங்
களிக்கும்பண் பொழிக்குங்கண
கழுத்துஞ்சங் கொளிக்கும்பொன் குழையாடச்;

சரக்குஞ்சம் புடைக்கும்பொன்
முகிறறந்தந் தரிக்குந்தஞ்
சடத்தும்*பண் பிலுக்குஞ்சம் பளமாதர்-

சலித்தும்பின் சிரித்துங்கொண்
டழைத்துஞ்சண பசப்பும்பெண்
தனத்துன்பந் தவிப்புண்டிங் குழல்வேனோ;

சுரர்ச்சங்கந் துதித்தந்தஞ்
செழித்தின்பங் களித்துண்பண்
சுகத்துய்ந்தின் பலர்ச்சிந்தங் கசுராதைத்-

துவைத்தும்பந் தடித்துஞ்சங்
கொலித்துங்குன் றிடித்தும்பண்
சுகித்துங்கண் களிப்புங்கொண் டிடும்வேலா;

சிரப்பண்புங் கரப்பண்புங்
கடப்பந்தொங் கலிற்பண்புஞ்
சிவப்பண்புந் தவப்பண்புந் தருவோனே-

தினைத்தொந்தங் குறட்பெண்பண்
சசிப்பெண்கொங் கையிற்றுஞ்சுஞ
செழிக்குஞ்செந் திலிற்றங்குமபெருமாளே. (எ)

23. கருப்பந்தங் கிரத்தம்பொங்
†கரைப்புண்கொண் டொருக்கும்பெண்
களைக்கண்டங் கவர்ப்பின்சென் றவரோடே-

---

*பண்பிலுக்கல் = தகுதியாகிய வஸ்துக்களைக்கொண்டு ஆடம்பரமாக அலங்கரித்தல். †அரைப்புண் = அல்குல்.

கலப்புண்டுஞ் சிலுப்புண்டுந்
துவக்குண்டும் பிணக்குண்டுங்
கலிப்புண்டுஞ் சலிப்புண்டுந் தடுமாறி;
செருத்தண்டந் தரித்தண்டம்
புகத்தண்டந் தகற்கென்றுந்
திகைத்தந்தின் செகத்*தஞ்சுங் கொடுமாயும்-
தியக்கங்கண் டியக்கொண்டென்
பிறப்பங்கஞ் சிறைப்பங்கஞ்
சிதைத்துனறன் பதத்தின்பந் தருவாயே.
அருக்கன்சஞ் சரிக்குந்தெண்
டிரைக்கண்சென் றரக்கன்பண்
பனைத்தும்பொன் றிடக்கன்றுங் கதிர்வேலா-
அணிச்சங்கங் கொழிக்குந்தண்
டலைப்பண்பெண் டிசைக்குங்கொந்
தளிக்குஞ்செந் திலிற்றங்குங் குமரேசா;
புரக்குஞ்சங் கரிக்குஞ்சங்
கரர்க்குஞ்சங் கரர்க்கின்பம்
புதுக்குங்கங் கையட்குந்தஞ் சுதனுய-
புனக்குன்றந் தினைக்குஞ்செந்
தினைபைம்பொன் குறக்கொம்பின்
புறத்தண்கொங் கையிற்றுஞ்சும் பெருமாளே.()

4. குழைக்குஞ்சந் தனச்செங்குங்
குமத்தின்சந் தநற்குன்றங்
குலுக்கும்பைங் கொடிக்கென்றிங் கியலாலே-
குழைக்குங்குண் குமிழ்க்குஞ்சென்
றுழைக்குஞ்செங் கயற்கண்கொண்
டழைக்கும்பண் டழைக்குஞ்சிங் கியராலே;
உழைக்குஞ்சங் கடத்துன்பன்
சுகப்பண்டஞ் சுகித்துண்டுண்
டெற்பிண்டம் பருத்தின்றிங் குழலாதே-

---

*அஞ்சு=பஞ்சேந்திரியம்.

உதிக்குஞ்செங் கதிர்ச்சிந்தும்
ப்ரபைக்கொன்றுஞ் சிலக்குந்தண்
டையர்க்குங்கிண் கிணிச்செம்பஞ் சடிசேராய்;

தழைக்குங்கொன் றையைச்செம்பொன்
சடைக்கண்டங் கியைத்தங்குந்
தரத்தஞ்செம் *புயத்தோன்றும் பெருமாளு-

தனிப்பங்கின் புறத்தின்செம்
பரத்தின்பங் கயத்தின்சஞ்
சரிக்குஞ்சங் கரிக்கென்றும் பெருவாழ்வே;

கழைக்குங்குஞ் சரக்கொம்புங்
கலைக்கொம்புங் கதிதென்றுங்
கயற்கண்பண் பளிகருந்திண் புயவேளே-

கறுக்குங்கொண் டலிற்பொங்குங்
கடற்சங்கங் கொழிக்குஞ்செந்
திலிற்கொண்டன் பிலிறங்கும் பெருமாளே.()

25. †மனத்தின்பங் கெனத்தங்கைம்
புலத்தென்றன் குணத்தஞ்சிந்
த்ரியத்தம்பந் தனைச்சிந்தும் படிகாலன்-

மலர்ச்செங்கண் கனற்பொங்குந்
திறத்தின்தண் டெடுத்தண்டங்
கிழித்தின்றிங் குறத் ††தங்கும் பலவோருடு

எனக்கென்றிங் குனக்கென்றங்
கினத்தின்கண் கணக்கென்றென்
றிளைத்தன்புங் கெடுத்தங்கங் கழிவாமுன்-

இசைக்குஞ்செந் தமிழ்க்கொண்டங்
கிரக்கும்புன் றொழிற்பங்கங்
கெடத்துன்பங் கழித்தின்பந் தருவாயே;

---

*புயம்=கை. †மனத்தின்பங்கென-தங்கு-ஐம்புலன்=மனம்செல்வதற்கு வேறு வேறு வாயில்களாகப் பொருந்தியிருக்கும் ஐம்புலன். ††தங்கும் பலவோர்=தத்துவக்கூட்டம்.

கனைக்குந்தண் கடற்சங்கங்
கரத்தின்கண் தரித் *தெங்குங்
கலக்கஞ்சிந் திடக்கண்டுஞ் சிடுமாலும்-
† கதித்தொண்பங் கயத்தன்பண்
பனைத்துங்குன் றிடச்சந்தங்
களிக்குஞ்சம் புவுக்குஞ்செம் பொருளீவாய்;
தினைக்குன்றந் தனிற்றங்கும்
சிறப்பெண்குங் குமக்கும்பத்
திருச்செயபொன் புயத்தென்றும் புனைவோனே-
செழிக்குங்குண் டகழ்ச்சங்கங்
கொழிக்குஞ்சந் தனத்தின்பைம்
பொழிற்றண்செந் திலிற்றங்கும் பெருமாளே.()

26. பருத்தந்தத் தினைத்தந்திட்
டிருக்குங்கச் சடார்த்துந்திப்
பருக்கும்பொற் ப்ரபைக்குன்றத் தனமானார்-
பரிக்குந்துற் சரக்கொன்றத்
திளைத்தங்குற் பலப்பண்பைப்
பரக்குஞ்சக் கரத்தின்சத் தியைநேரும்;
துரைச்செங்கட் கடைக்கொன்றிப்
பெருத்தன்புற் றிளைத்தங்குத்
துணிக்கும்புத் தியைச்சங்கித் தறியேனை-
துணைச்செம்பொற் பதத்தின்புற்
றெனக்கென்றப் பொருட்டங்கத்
தொடுக்குஞ்சொற் றமிழ்த்தக் ‡ இப் படியாள்வாய்;
§ தருத்தங்கப் பொலத்தண்டத்
தினைக்கொண்டச் சுரர்க்கஞ்சத்
தடத்துன்பத் தினைத்தந்திட் டெதிர்சூரன்-

---

* எங்கும் கலக்கம் சிந்திட கண்துஞ்சிடு மால்=தன்வியாபகத்துக் குட்பட்ட சர்வான்மாக்களும்கலக்கமற்றுச் சுகமுற அனந்தல்கொள் ளுந் திருமால்.

† கதித்தொண்பங்கயத்தன் = கதித்த + ஒண் + பங்கயத்தன்; பங்கயத்தன்=பங்கயத்தனும். ‡ இப்படி=இப்பூமியில்.

§ தரு தங்கு அ பொலத்து அண்டத்தினை = கற்பக விருக்ஷம் தங்கிய அந்தப் பொன்னுலகத்தை.

சமர்க்கெஞ்சிப் படித்துஞ்சக்
கதிர்த்துங்கத் தயிற்கொண்டத்
தலத்தும்பர்ப் பதிக்கன்புற் றருள்வோனே;
திருக்கஞ்சத் தனைக்கண்டித்
துறக் *கங்குட் டிவிட்டுஞ்சற்
சிவற்கன் றப் பொருட்கொஞ்சிப் பகர்வோனே-
செயத்துங்கக் கொடைத்துங்கத்
திருத்தங்கித் தரிக்கும்பொற்
றிருச்செந்திற் பதிக்கந்தப் பெருமாளே. (௨௬)

27. † அவனிபெறுந்தோட்டம்பொற்
குழையடரம்பாற்புண்பட்
டரிவையர்தம்பாற்கொங்கைக் கிடையேசெல்-
றணைதருபண்டாட்டங்கற்
றுருகிபகொண்டாட்டம்பெற்
றழிதருதிண்டாட்டஞ்சற் றொழியாதே;
பவமறகெஞ்சாற்சிந்தித்
திலகுகடம்பார்த்தண்டைப்
பதயுகளம்போற்றுங்கொற் றமுநாளும-
பதறியஅங்காப்பும்பத்
தியுமறிவும்போய்ச்சங்கைப்
படுதுயர்கண்பார்த்தன்புற் றருளாயோ;
தவநெறிகுன்றாப்பண்பிற்
றுறவினருக்தோற்றஞ்சத்
தனி ‡மலரஞ்சார்ப்புங்கத் தமராடி-
தமிழினி § தென்காற்கன்றிற்
றிரிதரு கஞ்சாக்கன்றைத்
தழலெழவென்றூர்க்கன்றற் புதமாக;

---

* கம்=சிரம்.

† அவனிபெறும் தோட்டு அம்பொற்குழை=பூமியை விலைமதிக்கும்படியான தோடாகிய அழகிய பொற்குழை.

‡ மலர் அஞ்ச ஆர் புங்கத்து = ஐவகை புஷ்ப பாணத்தால்.
§ தென்கால்கன்றில்=இளந்தென்றற் காற்றில்.

சிவவடிவங்காட்டுஞ்சற்
குருபரதென்பாற்சங்கத்
திரள்மணிசிந்தாச்சிந்துக் கரைமோதும்-
தினகரதிண்டேர்ச்சண்டப்
பரியிடறுங்கோட்டிஞ்சித்
திருவளர்செந்தூர்க்கந்தப் பெருமாளே. (கஉ)

28. தொடரியமன்போற்றுங்கப்
படையைவளைந்தோட்டுந் *துட்
டரையிளகுந்தோட்கொங்கைக் கிடுமாயத்-
துகில்விழவுஞ்சேர்த்தங்கத்
துளைவிரகுஞ்சூழ்த்தண்டித்
துயர்விளையுஞ்சூட்டின்பத் தொடுபாயற்;
கிடைகொடுசென்றிட்டுப்பொற்
பணியனைமென்றேற்றங்கற்
றணைபெனஇன் †றோட்டென்‡றற் கிடுமாதர்க்-
கினிமையிலொன்றாய்ச்சென்றுட்
படுமனமுன்றாட்கன்புற்
றியலிசைகொண்டேத்தென்றுட் டருவாயே;
நெடிதுதவங்கூர்க்குஞ்சற்
புருடரும்கைக்தேக்கம்பெற்
றயர்வுறகின்றார்த்தங்கட் கணையேவும்-
கிகரில்மதன்தேர்க்குன்றற்
றெரியில்விழுத்தேர்ப்பொன்றச்
சிறிதுநினைந்தாட்டங்கற் றிடுவார்முன்;
திடமுறஅன்பாற்சிந்தைக்
§ கறிவிடமுஞ்சேர்த்தும்பர்க்
கிடர்களையும்போர்ச்செங்கைத் திறல்வேலா-

---

* துட்டரை, பணியரை = துட்டர்க்கு, பணியர்க்கு. இது உருபு மயக்கம். † ஒட்டென்று=ஒடென்று.

‡ அற்கிடும்=அல்கிடும்=அன்பு சுருக்கும்.

§ அறிவிடம்=தெளிவு.

தினவரிவண்டார்த்தின்புற்
றிசைகொடுவந்தேத்திஞ்சித்
திருவளர்செந்தூர்க்கந்தப் பெருமாளே. (௧௩)

29. சங்குபோல்மென்கழுத் தந்தவாய்தந்தபற்
சந்தமோகின்பமுத் தெனவானிற்-
றங்குகார்பைங்குழற் கொங்கைநீள்தண்பொருப்
பென்றுதாழ்வொன்றறுத் துலகோரைத்;
துங்கவேள்செங்கைபொற் றொண்டல்நீயென்றுசொற்
கொண்டு *தாய்நின்றுரைத் துழலாதே-
துன்பநோய்சிந்தநற் கந்தவேளென்றுனைத்
தொண்டினு †மொன்றுரைக் கருள்வாயே;
வெங்கண் ‡வ்யாளங்கொதித் தெங்கும்வேமென்றெடுத்
துண்டுமேலண்டருக் கமுதாக-
விண்டநாதன்திருக் கொண்டல்பாகல்செருக்
குண்டுபேரம்பலத் தினிலாடி;
செங்கண்மால்பங்கயக் கண்பெறுதந்தறத்
தின்கணுடுந்திறற் கதிராழித்-
திங்கள்வாழுஞ்சடைத் தம்பிரானன்புறச்
செந்தில்வாழ்செந்தமிழ்ப் பெருமாளே. (௧௪)

30. பங்கமேவும்பிறப் பந்தகாரந்தனிற்
பந்தபாசந்தனிற் றடுமாறிப்-
பஞ்சபாணம்படப் புண்படாவஞ்சகப்
பண்பிலாடம்பரப் பொதுமாதர்;
தங்களாலிங்கனக் கொங்கையாகம்படச்
சங்கைமால்கொண்டிளைத் தயராதே-
தண்டைசூழ்கிண்கிணிப் புண்டரீகந்தனைத்
தந்துநீயன்புவைத் தருள்வாயே;

---

* தாய்=தாவி.
† ஒன்றுரைக்கருள்வாயே=ஒன்ற + உரைக்க + அருள்வாயே.
‡ வ்யாளம் = பாம்பு. இங்கே அதனிடத்திருந்து எழுந்த விஷத்தைக்குறித்தது.

அங்கைவேல்கொண்டரக் கன்ப்ரதாபங்கெடுத்
தண்டவேதண்டமுட் படவேதான்-
அஞ்சவேதிண்டிறற் * கொண்டலாகண்டலற்
கண்டலோகங் கொடுத் தருள்வோனே
திங்களார்கொன்றைமத் தந்துழாய்துன்றுபொற்
செஞ்†சடாபஞ்சரத் துறுதோகை-
சிந்தையேதென்றிசைத் தென்றல்வீசும்பொழிற்
செந்தில்வாழ்செந்தமிழ்ப் பெருமாளே. (கரு)

31. தண்டேனுண்டே வண்டார்வஞ்சேர்
‡ தண்டார்மஞ்சுக் குழல்மானார்-
தம்பாலன்பார் நெஞ்சேகொண்டே
சம்பாவஞ்சொற் றடிநாயேன்;
மண் § டோயந்தீ மென்கால்விண்டோய்
வன்காயம்பொய்க் குடில்வேறாய்-
வன்கானம்போ யண்டாமுன்பே
வந்தேநின்பொற் கழல்தாராய்;
கொண்டாடும்பேர் கொண்டாடுஞ்சூர்
கொன்றாய்வென்றிக் குமரேசா-
கொங்கார்வண்டார் பண்பாடுஞ்சீர்
குன்றூமன்றற் கிரியோனே;
¶ கண்டாகும்பா லுண்டாயண்டார்
கண்டா ** கந்தப் புயவேளே-

---

* கொண்டல் ஆகண்டலற்கு = மேகவாகனனாகிய தேவேந்திரனுக்கு.

† சடாபஞ்சரத்துறுதோகை=சடையாகியகூட்டிலிருக்குங்கங்கை.

‡ தண்டார் = தண் + தார்.

§ தோயம் = நீர்.

¶ கண்டாகும்பால்=கற்கண்டுபோலும் இனிமையுள்ளபால், அதாவது—தேவியார் பொற்கிண்ணத்துக் கறந்து ஊட்டிய திருமுலைப்பால்.

** கந்தப்புயம்=வாசனைதங்கிய புயம்.

* கந்தாமைந்தா ரந்தோள்மைந்தா
கந்தாசெந்திற் பெருமாளே. (௩௬)

32. வெங்காளம்பா ணஞ்சேல்கண்பால்
மென்பாகஞ்சொற் குயில் †மாலே-
மென்கேசந்தா னென்றேகொண்டார்
மென்றேளொன்றப் பொருள்தேடி;
வங்காளஞ் ‡ சோ னஞ்சீனம்போய்
வன்பேதுன்பப் படலாமோ-
§ மைந்தாருந்தோள் மைந்தா அந்தா
வந்தேயிந்தப் பொழுதாள்வாய்;
கொங்கார்பைந்தே னுண்டேவண்டார்
குன்றுள்கொங்கைக் கினியோனே-
குன்றேடுஞ்சூ ¶ ழம்பேழுஞ்சூ
ரும்போய்மங்கப் பொருகோபா;
கங்காளஞ்சேர் மொய்ம்பாரன்பார்
கன்றேயும்பர்க் கொருநாதா-
** கம்பூர்சிந்தார் தென்பால்வந்தாய்
கந்தாசெந்திற் பெருமாளே. (௩௭)

33. விதிபோலு †† முந்த விழியாலுமிந்து
நுதலாலுமொன்றி யிளைஞோர்தம்-
விரிவானசிந்தை யுருவாகிநொந்து
விறல்வேறுசிந்தை வினையாலே;

---

*கந்து ஆம் மைந்து ஆர் அம் தோள் மைந்தா=கம்பத்துக்குச்சமானமாகிய வலிமைபொருந்திய அழகிய தோள்களையுடைய பராக்கிரமனே. † மாலே = இருள்.

‡ சோனம் = சோனகம் - ஐம்பத்தாறு தேசத்தில் ஒன்று.

§ மைந்து = வலிமை.

¶ அம்பேழும் = எழுகடலும்.

** கம்பு ஊர் சிந்து = சங்குகள் தவழும் சமுத்திரம்.

†† உந்தவிழி = உந்து + அ + விழி.

'ஒன்றி...உருவாகிநொந்து...மொழிமாதர்' எனக் கூட்டுக.

இதமாகியின்ப மதுபோதவுண்டு
இனிதாளுமென்று மொழிமாதர்-
இருளாயதுன்ப மருள்மாயைவந்து
எனையீர்வதென்றும் ஒழியாதோ;
மதிசூடியண்டர் பதிவாழமண்டி
வருமாலமுண்டு விடையேறி-
மறவாதசிந்தை யடியார்கள்பங்கில
வருதேவசம்பு தருபாலா;
அதிமாயமொன்றி வருசூரர்பொன்ற
அயில்வேல்கொடன்று பொரும்வீரா-
அழகானசெம்பொன் மயில்மேலமர்ந்து
அலைவாயுகந்த பெருமாளே. (௩௩)

34. விறல்மாரனைந்து மலர்வாளிசிந்த
மிகவானிலிந்து வெயில்காய-
மிதவாடைவந்து தழல்போலவொன்ற
வினைமாதர்தந்தம் வசைகூற;
குறவாணர்குன்றி லுறைபேதைகொண்ட
கொடிதானதுன்ப மயல்தீர-
குளிர்மாலையின்க ணணிமாலைதந்து
குறைதீரவந்து குறுகாயோ;
மறிமானுகந்த இறையோன்மகிழ்ந்து
வழிபாடுதந்த மதியாளா-
* மலைமாவுசிந்த அலைவேலையஞ்ச
வடிவேலெறிந்த அதிதீரா;
அறிவாலறிந்து னிருதாளிறைஞ்சு
மடியாரிடைஞ்சல் களைவோனே-
அழகானசெம்பொன் மயில்மேலமர்ந்து
அலைவாயுகந்த பெருமாளே. (௩௪)

---

* மலை மாவுசிந்த=கிரௌஞ்சகிரியும் (சூரனுடைய) மாமரமுஞ்சிந்த.

35. சந்தனசவாதுநிறைகற்பூர
குங்குமபடீரவிரைகஸ்தூரி
தண்புழுகளாவுகளபச்சித வெகுவாச-
சண்பக * கலாரவகுளத்தாம
வம்புதுகிலாரவயிரக்கோவை
தங்கியகரோதரவித்தார பரிதான;
மந்தரமதானதனமிக்காசை
கொண்டுபொருள்தேடுமதிகெட்டே
வஞ்சகவிசாரஇதயப்பூவை யனையார்கள்-
† வந்தியிடுமாயவிரகப்பார்வை
அம்பிலுளம்வாடுமறிவற்றேனை
வந்தடிமையாளஇனியெப்போது நினைவாயே;
இந்த்ரபுரிகாவல்முதன்மைக்கார
சம்ப்ரமமயூரதுரகக்கார
என்றுமகலாதஇளமைக்கார குறமாதின்-
இன்பஅநுபோகசரசக்கார
வந்தஅசுரேசர்கலகக்கார
எங்களுமைசேயெனருமைக்கார மிகுபாவின்;
செந்தமிழ்சொல்நாலுகவிதைக்கார
குன்றெறியும்வேலின்வலிமைக்கார
செஞ்சொலடியார்கள்எளிமைக்காரஎழில்மேவும்-
‡ திங்கள்முடிநாதர்சமயக்கார
மந்த்ரவுபதேசமகிமைக்கார
செந்தில்நகர்வாழும்அருமைத்தேவர்
பெருமாளே. (௨௦)

36. முந்துதமிழ்மாலை கோடிக்கோடி
சந்தமொடுநீடு பாடிப்பாடி
§ முஞ்சர்மனைவாசல் தேடித்தேடி யுழலாதே-

---

* கலாரம் = கல்லாரம் = செங்குவளை.
† வந்தியிடும் = வருத்தத்தை உண்டுபண்ணும்.
‡ திங்கள்முடிநாதசமயம் = சைவசமயம்.
§ முஞ்சர் = செத்துப்போவோர்.

முந்தைவினையேவ ராமற்போக
மங்கையர்கள்காதல் தூரத்தேக
முந்தடிமையேனை யாளத்தானு முனைமீதே;
திந்திதிமிதோதி தீதித் தீதி
தந்த தன தான தானத்தான
செஞ்செணகுசேகு தாளத்தோடு நடமாடுஞ்-
செஞ்சிறியகால்வி சாலத்தோகை
துங்க அனுகூல பார்வைத்தீர
செம்பொன் மயில்மீதி லேயெப்போது
வருவாயே;
அந்தண்மறைவேள்வி காவற்கார
செந்தமிழ்சொல்பாவின் மாலைக்கார
அண்டருபகார சேவற்கார முடிமேலே-
அஞ்சலிசெய்வோர்கள் நேயக்கார
குன்றுருவஏவும் வேலைக்கார
அந்தம்வெகுவான ரூபக்கார எழிலான;
* சிந்துரமின்மேவு போகக்கார
விந்தைகுறமாது வேளைக்கார
செஞ்சொலடியார்கள் வாரக்கார எதிரான-
செஞ் † சமரைமாயு மாயக்கார
துங்கரணசூர சூறைக்கார
செந்தில்நகர்வாழு மாண்மைக்கார
பெருமாளே. (௨௧)

37. ‡ அம்பொத்தவிழித் தந்தக்கலகத்
தஞ்சிக்கமலக் கணையாலே-
அன்றிற்குமனற் றென்றற்குமிளைத்
தந்திப்பொழுதிற் பிறையாலே;

---

* சிந்துரமின் = தெய்வயானை.
† சமரைமாயும்=யுத்தத்தில் (பகைவரை) மாய்க்கும்.
‡ அம்பு ஒத்த விழி தந்த கலகத்து = அம்புபோன்ற கண்களையுடைய பெண்கள் பேசும் கலகச் சொல்லாகிய அலர்மொழிக்கு.

எம்பொற்கொடி * மற்றும்பக்கலனற்
றின்பக்கலவித் துயரானுள்-
என்பெற்றுலகிற் பெண்பெற்றவருக்
கின்பப்புவியுற் றிடலாமோ;
கொப்புக்கரிபட் டஞ்சப்பதுமக்
கொங்கைக்குறவிக் கினியோனே-
கொன்றைச்சடையர்க் கொன்றைத்தெரியக்
கொஞ்சித்தமிழைப் பகர்வோனே;
செம்பொற்சிகரப் பைம்பொற்கிரியைச்
சிந்தக்கறுவிப் பொரும்வேலா-
செஞ்சொற்புலவர்க் கன்புற்றதிருச்
செந்திற்குமரப் பெருமாளே. (உஉ)

38. கொங்கைப்பணையிற் செம்பொற்செறிவிற்
கொண்டற்குழலிற் கொடிதான-
கொன்றைக்கணைபொற் பந்தக்கயலிற்
கொஞ்சுக்கிளியுற் றுறவான;
† சங்கத்தொனியிற் சென்றிற்கடையிற்
சந்திப்பவரைச் சருவாதே-
சந்தப்படியுற் ‡றென்றற்றலையிற்
சந்தப்பதம்வைத் தருள்வாயே.
அங்கப்படைவிட் டன்றைப்படுகைக்
§கந்திக்கடலிற் கடிதோடா-

---

* மன் துன்ப கலன் அற்று=தரித்திருக்கின்ற துன்பத்தைச் செய்யும் ஆபரணங்களை அறவிடுத்து.

† சங்கம் = சங்குபோன்ற கண்டம்,

‡ என்றற்றலை=என்றன் தலை,

§ அந்திக்கடல் = செந்திலுக்கும் மகேந்திரபுரிக்கும் இடைச்சந்தியாகவுள்ள கடல்.

*அந்தப்பொழிலிற் † சந்துத்தலையுற்
றஞ்சப்பொருதற் றொழியாதே;
செங்கைக்கதிரும் றொன்றக்கடலிற்
‡ சென்றுற்றவர்தற் பொருளானாய்-
சிந்தைக்கனிவைத் தந்தப்பொழிலிற்
செந்திற்குமரப் பெருமாளே. (௨௩)

39. காலனார்வெங்கொடுந் தூதர்பாசங்கொடென்
காலி§னார்த்துடன் கொடுபோக-
காதலார்மைந்தருந் தாயாருஞ்சுடுங்
கானமேபின்தொடாந் தலறுமுன்;
சூலம்வாள்தண்டுசெஞ் சேவல்கோதண்டமுஞ்
சூடுதோளுந்தடந் திருமார்புந்-
தூயதாளதண்டையுங் காணஆர்வஞ்செயுந்
தோகைமேல்கொண்டுமுன் வரவேணும்;
ஆலகாலம்பரன் பாலதாகஞ்சிட
தேவர்வாழன்றுகந் தமுதீயும்-
ஆரவாரஞ்செயும் வேலைமேல்கண்வளர்ந்
தாதிமாயன்றனன் மருகோனே;
சாலிசேர்சங்கினம் வாவிசூழ்பங்கயஞ்
சாரலார்செந்திலம் பதிவாழ்வே-
தாவுசூரஞ்சிமுன் சாயவேகம்பெறுந்
தாரைவேலுந்திடும் பெருமாளே. (௨௪)

40. சங்கைதானொன்றுதா னின்றியேநெஞ்சிலே
சஞ்சலா ரம்பமாயன்-
சந்தொடேகுங்குமா லங்க்ருதாடம்பரா
சம்ப்ரமா னந்தமாயன்;

---

* அந்தப்பொழிலில்=அந்தப் பூமியாகிய மகேந்திரத்தில்.
† சந்துத் தலையுற்று = தூதாகச்சென்று.
‡ சென்றுற்றவர்=போய்வந்தவராகிய வீரவாகுதேவர்.
§ ஆர்த்து = கட்டி.

மங்கைமார்கொங்கைசேர் அங்கமோகங்களால்
வம்பிலே துன்புறுமே-
வண்குகாநின்சொரூபம்ப்ரகாசங்கொடே
வந்துநீ யன்பிலாள்வாய்;
கங்கைசூடும்பிரான் மைந்தனே அந்தனே
கந்தனே விஞ்சையூரா-
கம்பியாதிந்த்ரலோகங்கள் *காவென்றவா
கண்டலே சன்சொல்வீரா;
செங்கைவேல் வென்றிவேல் கொண்டுசூர்பொன்றவே
சென்றுமோ தும்ப்ரதாபா-
செங்கண்மால் † பங்கஜா னன்தொழானந்தவேள்
செந்தில்வாழ் தம்பிரானே. (௨௫)

41. அங்கைமென்குழலாய்வார்போலே
சந்திநின்றயலோடேபோவா
ரன்புகொண்டிட நீரோபோறீ ரறியீரோ-
அன்றுவந்தொருநாள்நீர்போனீர்
பின்புகண்டறியோநாமிதே
அன்றுமின்றுமொர்போதோ போகா
துயில்வாரா;
எங்களந்தரம் வேறாரோர்வார்
பண்டிருந்தது போதாதோமே
லின்றுதந்துறவோதானீதே னிதுபோதா-
திங்குநின்ற தென்வீடேவாரீ
ரென்றிணங்கிகள் மாயாலீலா
இன்பசிங்கியில்வீணே வீழா தருள்வாயே;
மங்குலின்புறுவானாய் வானா
டன்றரும்பியகாலாய் நீள்கால்
மண்டுறும்புகைநீறா வீறா எரிதீயாய்-

---

*கா என்றது ஆகண்டலேசன் எனப்பிரித்துக்கொள்க. ஆகண்டலேசன் = தேவேந்திரன்.

† பங்கஜாஸனன் என்பது பங்கஜானன் என்றாயிற்று.

வந்திரைந்தெழு நீராய்நீர்சூழ்
அம்பரம்புனை பாராய்பாரேழ்
மண்டலம்புகழ் நீயாய்நானுய் மலரோனுய்;
உங்கள்சங்கரர் தாமாய்நாமார்
* அண்டபந்திகள் தாமாய்வானுய்
ஒன்றினுங்கடை தோயாமாயோன் மருகோனே-
ஒண்தடம்பொழில் நீரேர்கோடேர்
செந்திலம்பதி வாழ்வேவாழ்வோர்
உண்டநெஞ்சறி தேனேவானோர் பெருமாளே.

12. அந்தகன்வருந்தினம் பிறகிடச்
சந்ததமும்வந்துகண் டரிவையர்க்
கன்புருகுசங்கதந் தவிரமுக் குணமாள-
† அந்திபகலென்றிரண் டையுமொழித்
திந்திரியசஞ்சலங் களையறுத்
தம்புயபதங்களின் பெருமையைக் கவிபாடி;
செந்திலையுணர்ந்துணர்ந் துணர்வுறக்
‡ கந்தனையறிந்தறிந் தறிவினிற்
சென்றுசெருகுந்தடந் தெளிதரத் தணியாத-
சிந்தையுமவிழ்ந்தவிழ்ந் துரையொழித்
தென்செயலழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவரஎன்றுநின் தெரிசனைப் படுவேனோ;
கொந்தவிழ்சரண்சரண் சரணெனக்
கும்பிடுபுரந்தரன் பதிபெறக்
குஞ்சரிகுயம்புயம் பெறஅரக் கருமாள-
குன்றிடியஅம்பொனின் திருவரைக்
கிண்கிணிகிணின்கிணின் கிணினெனக்
குண்டலமசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீச;

---

* அண்டபந்திகள் தாம் ஆய்வானுய் எனப்பிரிக்க.
† அந்திபகல்=கேவலசகலம்.
‡ கந்தனை=கந்தனுகிய நின்னை; இது இடவழுவமைதி.

தந்தனதனந்தனந் தனவெனச்
செஞ்சிறுசதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள்கலின்கலின் கலினெனத் திருவான-
சங்கரிமனங்குழைந் துருகமுத்
தந்தரவருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததிசகந்தொழுஞ் சரவணப் பெருமாளே. ()

43. அருணமணிமேவுபூஷித ம்ருகமதபடீரலேபன
அபினவவிசாலபூரண
அம்பொற்கும்பத் தனமோதி-
அளிகுலவுமாதர்லீலையின் முழுகியபிஷேகபீதென
அறவுமுறவாடிநீடிய
அங்கைக்கொங்கைக் கிதமாகி,
*இருணிறையமோதிமாலிகை சருவியுறவானவேளையி
லிழைகலையமாதராரவழி
பின்புற்றன்புற் றழியாநீள்-
இரவுபகல்மோகனாகியெ படியில்மடியாமல்யானுமுன
இணையடிகள்பாடிவாழவு
னெஞ்சிற்செஞ்சொற் றருவாயே;
தருணமணியாடராவணி குடிலசடிலாதியோதிய
சதுர்மறையினாதியாகிய
சங்கத்துங்கக் குழையாளர்-
தருமுருகமேகசாயலர் தமரமகராழிசூழ்புவி
தனைமுழுதும்வாரியேயமு
துண்டிட்டண்டர்க் கருள்கூரும;
செருமுதலிமேவுமாவலி யதிமதகபோலமாமலை
தெளிவினுடன்மூலமேயென
முந்தச்சிந்தித் தருள்மாயன்-
திருமருகசூரன்மார்பொடு சிலையுருவவேலையேவிய
ஜெயசரவணமனோகர
செந்திற்கந்தப் பெருமாளே. (௨௮)

* இருள் நிறை அம் ஓதி.

273. பூசலிட்டுச்சரத்தை நேர்கழித்துப்பெருத்த
போர்விடத்தைக்கெடுத்து வடிகூர்வாள்-
போலமுட்டிக்குழைக்கு ளோடிவெட்டித்துளைத்து
போகமிக்கப்பரிக்கும் விழியார்மேல்;
ஆசைவைத்துக்கலக்க மோகமுற்றுத்துயர்க்கு
ளாகிமெத்தக்களைத்து ளழியாமே-
ஆரணத்துக்கணைத்து ணுண்மலர்ப்பொற்பதத்தை
யான்வழுத்திச்சுகிக்க அருள்வாயே;
வாசமுற்றுத்தழைத்த தாளிணைப்பத்த*ரத்த
மாதர்கட்கட்சிறைக்கு ளழியாமே-
வாழ்வுறப்புக்கிரத்ன ரேகையொக்கச்சிறக்கு
மாமயிற்பொற்கழுத்தில வரும்வீரா;
வீசுமுத்துத்தெறிக்க வேலைபுக்குற்றிருக்கும்
வீறுடைப்பொற்குறத்தி கணவோனே-
வேலெடுத்துக்கரத்தி †னீலவெற்பிற்றழைத்த
வேளெனச்சொற்கருத்தர் பெருமாளே. (௪௬)

274 பொருவிக்கந்தொடடர்ச் ‡செருவிக்கன்றொடுமிப்
புதுமைப்புண்டரிகக் கணையாலே-
புளகக்கொங்கையிடத் திளகக்§கொங்கையனற்
பொழியத்தென்றல்துரக் குதலாலே;
தெருவிற்பெண்கள்மிகக் கறுவிச்சண்டையிடத்
திரியத்திங்களுதிப் பதனாலே-
செயலறறிங்கணையிற் றுயிலற்றஞ்சியயர்த்
தெரிவைக்குன்குரவைத் தரவேணும்;
அருவிக்குன்றடையப் பரவிச்செந்தினைவித்
தருமைக்குன்றவருக் கெளியோனே-

---

* அத்தமாதர்கள்=பொருட்பெண்டிராகியவேசிகள்.
† நீலவெற்பு=திருத்தணி.
‡ செரு+இக்கன்+தொடும். இக்கன்=கரும்பு வில்லையுடைய மன்மதன். § கொங்கு=பூந்தாது.

அசுரர்க்கங்கயல்பட் டமரர்க்கண்டமளித்
தயில்கைக்கொண்டதிறற் குமரேசா;
தருவைக்கும்பதியிற் றிருவைச்சென்றணுகித்
தழுவிக்கொண்டபுயத் திருமார்பா-
தரளச்சங்குவயற் றிரளிற்றங்குதிருத்
தணிகைச்செங்கழநிப் பெருமாளே. (சஎ)

275. பொற்பதத்தினைத்துதித்து நற்பதத்திலுற்றபத்தர்
பொற்புரைத்து*நெக்குருக்க அறியாதே-
புத்தகப்பிதற்றைவிட்டு வித்தகத்துனைத்துதிக்க
புத்தியிற்கலக்கமற்று நினையாதே;
முற்படைத்தலத்துதித்து பிற்படைத்தகிர்த்யமுற்றி
முற்கடைத்தவித்துநித்த முழல்வேனை-
முட்டவிக்கடைப்பிறப்பி னுட்கிடப்பதைத்தவிர்த்து
முத்திசற்றெனக்களிப்ப தொருநாளே;
வெற்பளித்ததற்பரைக்கி டப்புறத்தையுற்றளித்த
வித்தகத்தர்பெற்றகொற்ற மயில்வீரா-
வித்தைதத்வமுத்தமிழ்ச்சொ லத்தசத்தம்வித்தரிக்கு
மெய்த்திருத்தணிப்பொருப்பி லுறைவோனே;
கற்பகப்புனக்குறத்தி கச்சடர்த்தசித்ரமுற்ற
கற்புரத்திருத்தனத்தி லணைவோனே-
கைத்தரக்கர்கொத்துகச்சி னத்துவஜ்ரனுக்கமைத்த
கைத்தொழுத்தறித்துவிட்ட பெருமாளே. ()

276. மலைமுலைச்சியர் கயல்விழிச்சியர்
மதிமுகத்திய ரழகான-
மயில்நடைச்சியர் குயில்மொழிச்சியர்
மனதுருக்கிக ளணையீதே;
கலைநெகிழ்த்திடு உறவணைத்திடு
கலவியிற்றுவள் பிணிதீராக்-

* நெக்குருக்க=நெகிழ்ந்துருக.

கசடனைக்குண அசடனைப்புகல்
கதியில்வைப்பது மொருநாளே;
குலகிரிக்குல முருவவிட்டமர்
குலவுசித்திர முனைவேலா-
குறவர்பெற்றிடு சிறுமியைப்புணர்
குமரசற்குண மயில்வீரா;
தலமதிற்புக லமர*ருற்றிடர்
தனையகற்றிய அருளாளா-
தருவிரைத்தெழு பொழில்மிகுத்திடு
தணிமலைக்குயர் பெருமாளே, (௪௯)

277. முகத்தைமினுக்கிக ளசடிகள்கபடிகள்
விழித்துமருட்டிகள் கெருவிகள்திருடிகள்
மொழிக்குள்மயக்கிகள்வகைதனில்நகைதனில்
விதமாக-
முழித்துமயற்கொளு மறிவிலிநெறியிலி
புழுக்குடலைப்பொரு ளெனமிகஎணியவர்
முயக்கமடுத்துழி தருமடியவனிடர் ஒழிவாக;
மிகுத்தழகைப்பெறு மறுமுகசரவண
புயத்திளகிக்கமழ் நறைமலர்தொடைமிக
விசைக்கொடுமைப்பெறு மரகதகலபியும் வடிவேலும்
வெளிப்படெனக்கினி யிரவொடுபகலற
திருப்பதியப்புக ழமுதியல்கவிசொலி
விதித்தனெழுத்†தினை தரவருமொருபொரு
ளருளாயோ;
புகைத்தழலைக்கொடு திரிபுரமெரிபட
நகைத்தவருக்கிட முறைபவள்வலைமகள்
பொருப்பிலிமக்கிரி பதிபெறுமிமையவ ளபிராமி

* உற்ற இடர். † இனைதார=மெலிய.

*பொதுற்றுதிமித்திமி நடமிடுபகிரதி
எழுத்தறிருத்திரி பகவதிகவுரிகை
பொருட்பயனுக்குரை யடுகியசமையபவள்
அமுதாக;
செகத்தையகத்திடு கெடியவர்கடையவள்
அறத்தைவளர்த்திடு பரசிவைகுலவதி
திறத்தமிழைத்தருபழையவளருளியசிறியோனே.
செருக்குமரக்கர்கள் பொடிபடவடிவுள
கரத்திலயிற்கொடு பொருதிமையவர்பணி
திருத்தணிபொற்பதி தனில்மயில்நடவிய
பெருமாளே. (௫௦)

278. முகிலுமிரவியு முழுகதிர்தரளமு
முடுகுசிலைகொடு கணைவிடுமதனனு
முடியவொருபொரு ளுதவியபுதல்வனு
மெனநாடி-
முதிய†கனனென தெய்வதருநிகரென
முதலைமடுவினி ‡லதவியபுயலென
முகமுமறுமுக முடையவனிவனென
வறியோரை;
சகலபதவியு முடையவரிவரென
தனியதனுவல விஜயனிவனென
தபனன்வலம்வரு கிரிதனைநிகரென இசைபாடி-
§சயிலபகலவ ரிடைதொறும்நடைசெயு
மிரவுதவிரவெ யிருபதமடையவெ
சவிதவடியவர் தவமதில்வரஅருள் புரிவாயே;
அகிலபுவனமு மடைவினிலுதவிய
இமயகிரிமயில் குலவரை தனுவென
அதிகைவருபுர நொடியினிலெரிசெய்த அபிராமி-

---

* பொது உற்று. பொது=அம்பலம்.
† கனன்=கர்ணன். ‡ அதவிய=சம்மாரஞ்செய்த.
§ சயிலபகலவர்=கற்பிளவையொத்தவர்.

அமருமிடனன லெனுமொருவடிவுடை
யவ*னிலுரையவன் முதுதமிழுடையவ
னரியொடயனுல கரியவனடாவில்
சிவன்வாழ்வே;
திகிரிகிசெரர் தடமுடிபொடிபட
திரைகளெறிகடல் சுவறிடகளமிசை
திரடுகுறடுகள் புரள்வெகுகுருதிகள் பெருகாறு-
சிகரகிரிநெரி படபடைபொருதருள்
திமிரதினகர குருபரஇளமயில்
சிவணிவருமொரு தணிகையில்நிலைதிகழ்
பெருமாளே. (ருக)

279 முடித்தகுழலினர் வடித்தமொழியினர்
முகத்திலிலகிய விழியாலும்-
முலைக்கிரிகள்மிசை யசைத்ததுகிலினும்
இளைத்தஇடையினு மயலாகிப்;
படுத்தஅணைதனி லணைத்தஅவரொடு
படிக்குளனுதின முழலாதே-
பருத்தமயில்மிசை நினைத்தபொழுதுன
பதத்துமலரிணை யருள்வாயே;
துடித்துநசமுகன் முடித்தலைகள்விழ
தொடுத்தசரம்விடு ரகுராமன்-
துகைத்துவுலகையொ ரடிக்குளளவிடு
துலக்கஅரிதிரு மருகோனே;
தடத்துளுறைகயல் வயற்குளெதிர்படு
தழைத்தகதலிக ளவைசாயத்-
தருக்குமெழிலுறு திருத்தணிகையினில்
தழைத்தசரவண பெருமாளே. (ருஉ)

280. முத்துத்தெறிக்கவள ரிக்குச்சிலைக்கைமதன்
முட்டத்தொடுத்த மலராலே-

* இல் உரையவன்=உரையிறந்தவன்=வாக்குக்கெட்டாதவன்.

முத்தத்திருச்சலதி முற்றத்*துதித்தியென
முற்பட்டெறிக்கு கிலவாலே;
எத்தத்தையர்க்குமித மிக்குப்பெருக்கமணி
இப்பொற்கொடிச்சி தளராதே-
எத்திக்குமுற்றபுகழ் வெற்றித்திருத்தணியி
விற்றைத்தினத்தில் வரவேணும்;
மெத்தச்சினத்துவட திக்குக்குலச்சிகர
வெற்பைத்துளைத்த கதிர்வேலா-
மெச்சிக்குறத்திதன மிச்சித்தணைத்துருகி
மிக்குப்பணைத்த மணிமார்பா;
மத்தப்ரமத்தரணி †மத்தச்சடைப்பரமர்
சித்தத்தில்வைத்த கழலோனே-
வட்டத்திரைக்கடலில் மட்டித்தெதிர்த்தவரை
வெட்டித்துணித்த பெருமாளே. (௫௬)

281. மூலைபுளகமெழஅங்கை மருவுசரிவளைகொஞ்ச
முகிலளகமகில்பொங்க அமுதான-
மொழிபதறஅருமந்த விழிகுவியமதிகொண்ட
முகம்வெயர்வுபெறமன்ற லணையூடே;
கலைநெகிழவளர்வஞ்சி யிடைதுவளவுடலொன்று
படவுருகியிதயங்கள் ப்ரியமேகூர்-
கலவிகரையழியின்ப அலையிலலைபடுகின்ற
கவலைகெடநினதன்பு பெறுவேனோ;
அலையெறியுமெழில்சண்ட உததிவயிறழல்மண்ட
அதிரவெடிபடஅண்ட மிமையோர்கள்-
அபயமெனநடுகின்ற அசுரர்படஅடியுண்டு
அவர்கள்முனைகெடநின்று பொரும்வேலா;
தலைமதியநதிதும்பை யிளவறுகுகமழ்கொன்றை
சடைமுடியிலணிகின்ற பெருமானோர்-

---

* உதித்தி=உதி+தீ. உதி=உலைத்துருத்தி.
† மத்தம்=ஊமத்தம்.

தருகுமரவிடவைந்து தலைபரவுதொழுகின்ற
தணிமலையிலுறைகின்ற பெருமாளே. (ருச)

282. வங்கம்பெறுகட லெங்கும்பொருதிரை
வந்தூந்தியதிரு மதனாலே-
வஞ்சம்பெறுதிட நெஞ்சன்தழலுற
வஞ்சம்பதும்விடு மதனாலே;
பங்கம்படுமென தங்கந்தனிலுதி
பண்பொன்றியவொரு கொடியான-
பஞ்சொன்றியமயில் நெஞ்சொன்றியெயழல்
பொன்றுந்தனிமையை நினையாயோ;
தெங்கந்திரளுட னெங்குங்கதலிகள்
சென்றோன்றியபொழி லதனூடே-
தெந்தெந்தெனதென என்றண்டுறஅளி
நின்றுந்திகழ்வொடு மயிலாட;
பொங்குஞ்சுனைகளி லெங்குங்குவளைக
ளென்றும்புகழ்பெற மலரீனும்-
பொன்றென்றணிகையில் நின்றங்கெழுபுவி
யென்றுஞ்செயவல பெருமாளே. (ருரு)

233. வாருற்றெழு பூண்முலைவஞ்சியர்
காருற்றெழு நீள்குழல்மஞ்சியர்
வாலக்குயில் போல்மொழிகொஞ்சியர்
தெருமீதே-
மாணுற்றெதிர் மோகனவிஞ்சையர்
சேலுற்றெழு நேர்விழிவிஞ்சியர்
வாகக்குழை யாமபாஞ்சியர் மயலாலே;
சீருற்றெழு ஞானமுடன்கல்வி
கோரற்றவர் மால்கொடுமங்கியெ
சேருற்றறி வானதழிந்துயி ரீறுவாமுன்-
சேவற்கொடி யோடுசிகண்டியின்
மீதுற்றறி ஞோர்புகழ்பொங்கிய
தேசுக்கதிர் கோடியெனும்பத மருள்வாயே;

போருற்றிடு சூரர்சிரங்களை
வீரத்தொடு பாரிலரிந்தெழு
*பூதக்கொடி சோரியருந்திட விடும்வேலா-

பூகக்குலை யேவிழுமென்கயல்
தாவக்குலை வாழைகளுஞ்செறி
போகச்செநெ லேயுதிருஞ்†செய்க ளவைகோடி;

சாரற்கிரி தோறுமெழும்பொழில்
தூரத்தொழு வார்வினைசிந்திடு
‡தாதுற்றெழு கோபுரமண்டப மவைசூழுந்-

தார்மெத்திய தோரணமென்தெரு
தேர்சுற்றிய வார்பதிஅண்டர்கள்
தாமெச்சிய நீள்தணிபம்பதி பெருமாளே. ()

284. வெற்றிசெயவுற்றகழை விற்குதைவளைத்துமதன்
விட்டகணைபட்ட விசையாலே-

வெட்டவெளியிற்றெருவில்வட்ட§பணையிற்கனல்வி
ரித்தொளிபரப்பு மதியாலே;

பற்றிவசைகற்றபல தத்தையர்தமக்கு ‖ இசை
பட்டதிகிரிக்கு மழியாதே-

பத்தியையெனக்கருளி முத்தியையளித்துவளர்
பச்சைமயிலுற்று வரவேணும்;

நெற்றிவிழிபட்டெரிய நட்டமிடுமுத்தமர்நி
னைக்குமனமொத்த கழல்வீரா-

நெய்க்கமலமொக்குமுலை மெய்க்குறவியிச்சையுற
நித்தமிறுகத்த ழுவுமார்பா;

---

* பூதகொடி=பூதகோடிகள். பூதங்களும் காக்கைகளும் என்றும் பொருள் கொள்ளலாம். கொடி=காக்கை. † செய்கள்=வயல்கள்.

‡ தாது=பொன். § பணை=பறை.

‖ இசைபட்ட திகிரி=புல்லாங்குழல். திகிரி=மூங்கில்.

எற்றியதிருச்சலதி சுற்றியதிருத்தணியி
லெப்பொழுதுநிற்கு முருகோனே-
எட்டசலமெட்டநில முட்டமுடிநெட்டசுர
ரிட்டசிறைவிட்ட பெருமாளே. (௫௭)

வள்ளிமலே.

285. அல்விழியாலு முல்லைநகையாலு
மல்லல்படஆசைக் கடலீயும்-
அள்ளவினிதாகி நள்ளிரவுபோலு
முள்ளவினையாரத் தனமாரும்;
இல்லுமிளையோரு மெல்லஅயலாக
வலெருமைமாயச் சமனாரும்-
எள்ளியெனதாவி கொள்ளைகொளுநாளி
லுய்யவொருநீபொற் கழல்தாராய்;
தொல்லைமறைதேடி யில்லையெனுநாதர்
சொல்லுமுபதேசக் குருநாதா-
துள்ளிவிளையாடு புள்ளியுழைநாண
வெள்ளிவனமீதுற் றுறைவோனே;
வல்லசுரர்மாள நல்லசுரர்வாழ
வல்லவடிவேலைத் தொடுவோனே-
வள்ளிபடர்சாரல் வள்ளிமலைமேவு
வள்ளிமணவாளப் பெருமாளே. (௧)

286. ஐயுமுறுநோயு மையலுமவாவி
னைவருமுபாயப் பலநூலின்-
அள்ளல்கடவாது துள்ளியதில்மாயு
முள்ளமுமில்வாழ்வைக் கருதாசைப்;
பொய்யுமகலாத மெய்யைவளராவி
உய்யும்வகையோகத் தணுகாதே-
புல்லறிவுபேசி யல்லல்படுவேனை
நல்லஇருதாளிற் புணர்வாயே;

மெய்யபொழில்நீடு தையலை*முநாலு
செய்யபுயமீதுற் றணைவோனே-
வெள்ளையிபமேறு வள்ளல்கிளைவாழ
†வெள்ளமுதுமாவைப் பொருதோனே;
வையமுழுதாளு மையமயில்வீர
வல்லமுருகாமுத் தமிழ்வேளே-
வள்ளிபடர்சாரல் வள்ளிமலைமேவு
வள்ளிமணவாளப் பெருமாளே. (௨)

287. கையொத்துவாழுமிந்த மெய்யொத்தவாழ்விகந்து
பொய்யொத்தவாழ்வுகண்டு மயலாகிக்-
கல்லுக்குநேரும்வஞ்ச வுள்ளத்தர்மேல்விழுந்து
கள்ளப்பயோதரங்க ளுடன்மேவி;
உய்யப்படாமல்நின்று கையர்க்குபாயமொன்று
பொய்யர்க்குமேயயர்ந்து ளுடைநாயேன்-
உள்ளப்‡பெறுகநின்று தொய்யப்படாமலென்று
§முள்ளத்தின்மாய்வதொன்றை மொழியாயோ;
ஐயப்படாத ‖ ஐந்து பொய்யற்றசோலைதங்கு
தெய்வத்தெய்வானைகொங்கை புணர்வோனே-
அல்லைப்பொறுமுழங்கு சொல்லுக்ரசேவலொன்று
வெல்லப்பதாகைகொண்ட திறல்வேலா;
வையத்தைதயோடியைந்து கையற்குவீசுதந்தை
மெய்யொத்தநீதிகண்ட பெரியோனே-
வள்ளிக்குழாமடர்ந்த வள்ளிக்கல்மீதுசென்று
வள்ளிக்குவேடைகொண்ட பெருமாளே. (௩)

288. முல்லைக்குமாரனங்கை வில்லுக்குமாதர்தங்கள்
பல்லுக்கும்வாடியின்ப முயலாநீள்-

---

* முநாலு=பன்னிரண்டு. † வெள்ளம்=சமுத்திரத்தினிடத்தில்.
‡ பெறுக=பேறுக. § உள்ளத்தின்மாய்வு=மனோலயம்.
‖ ஐந்து...சோலை=சந்தனம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம்-என்னும் ஐவகைத்தருக்கள் நிறைந்தசோலை.

முள்ளூற்றகால்மடிந்து கொள்ளிக்குள்மூழ்கிவெந்து
பள்ளத்தில்வீழ்வதன்றி யொருஞான;
எல்லைக்குமாரணங்கள் சொல்லித்தொழாவணங்கு
மெல்லைக்கும்வாவிநின்ற னருள்நாமம்-
எள்ளற்குமாலயர்ந்து வுள்ளத்திலாவனன்று
முள்ளப்பெரு*சிணங்கை யொழிவேனோ;
†அல்லைக்கவானைதந்த வல்லிக்குமார்பிலங்க
அல்லிக்கொள்மார்பலங்கல் புனைவோனே-
அள்ளற்படாதகங்கை வெள்ளத்துவாவிதங்கி
மெள்ளச்சரோருகங்கள் பயில்நாதா;
வல்லைக்குமாரகந்த தில்லைப்புரார்சிமைந்த
மல்லுப்பொராதிரண்டு புயவீரா-
வள்ளிக்குழாமடர்ந்த வள்ளிக்கல்மீதுசென்று
வள்ளிக்குவேடைகொண்ட பெருமாளே. (௪)

289. கள்ளக்‡குவாற்பை தொள்ளைப்புலாற்பை
§துள்ளிக்கனுர்க்க யவுகோப-
கள்வைத்ததோற்பை ‖பொள்ளூற்றகாற்பை
கொள்ளைத்துராற்பை பசுபாச;
அள்ளற்பைமாற்பை ¶ஞெள்ளற்பைசிப்பை
வெள்ளிட்டசாப்**பி சிதமீரல்-
அள்ளச்††சுவாக்கள் சள்ளிட்டிழாப்பல்
கொள்ளப்படாக்கை தவிர்வேனோ;
தெள்ளத்திசேர்ப்ப ‡‡வெள்ளத்திமாற்கும்
§§வெள்ளுத்திமாற்கு மருகோனே-

---

* இணங்கை=இணக்கத்தை. † அல்லைக்கு=இரவில்.
‡ குவால்=கூட்டம். § துள் இக்கன் எனப்பிரிக்க.
‖ பொள்ளூற்ற=பொள்ளெனவுற்ற=விரைந்து செல்லும்.
¶ ஞெள்ளல்=தவறு. ** பிசிதம்=இறைச்சி.
†† சுவாக்கள்=நாய்கள்.
‡‡ வெள்ளத்திமால்=வெள்ளையானையையுடைய இந்திரன்.
§§ வெள்ளுத்திமால் = வெள்ளுந்திமால் = திருப்பாற்கடலையுடையவிஷ்ணு. உத்தி=கடல்.

சிள்ளிட்டகாட்டி லுள்ளக்கிராரக்கொல்
புள்ளத்தமார்க்கம் வருவோனே;
வள்ளிச்சன்மார்க்கம் *விள்ளைக்குநோக்க
வல்லைக்குளேற்று மிளையோனே-
வள்ளிக்குழாத்து வள்ளிக்கல்காத்த
வள்ளிக்குவாய்த்த பெருமாளே. (ரு)

290. வெல்லிக்குவீக்கு முல்லைக்கைவீக்கு
வில்லிக்கதாக்க ருதும்வேளால்-
வில்லற்றவாக்கொள் சொல்லற்றுகாப்பொய்
யில்லத்துருக்க வலைமேவு;
பல்லத்திவாய்க்க அல்லற்படாக்கை
நல்லிற்பொருச்ச மயமாறின்-
பல்லத்தமார்க்க வல்லர்க்கர்மூர்க்கர்
கல்விக்கலாத்த லையலாமோ;
அல்லைக்கொல்வார்த்தை சொல்லிக்கிதோத்து
சொல்குக்குடாரத்த இளையோனே-
அல்லுக்குமாற்றி னெல்லுக்குமேற்புல்
கெல்லைப்படாக்க ருணைவேளே;
வல்லைக்குமேற்றர் தில்லைக்குமேற்றர்
வல்லிக்குமேற்ற ரருள்வோனே-
வள்ளிக்குழாத்து வள்ளிக்கல்காத்த
வள்ளிக்குவாய்த்த பெருமாளே. (சு)

## இதன்பொருள்.

வெல்லி குவிக்கும்=உலகத்தைவென்று குவிக்கத்தக்க,—முல்லை கை=முல்லை மலர்ப்பாணந்தரித்த கையினையுடைய,—வீக்குவில் இக்கதாகருதும் வேளால்=நான் கட்டியவில் கரும்பாக விரும்பிய மன்மதனால்,—வில் அற்று=ஒளிமழுங்கி,—அவாகொள் சொல் அற்று=ஆசைகொண்டுரைக்கும் சொல்லும்போய்,—உகா=(மனம்) நெகிழ்ந்து,—பொய் இல்லத்து உரு=(அதனோடு) பொய்வாழ்வுடைய

* விள் ஐக்கு=வினவியதாதைக்கு.

இல்லத்திற்சென்று,—கவலை மேவு பல் அத்திவாய்க்க=(அங்கே) பல கவலைக்கடல்நேர,—அல்லல்படு ஆக்கை=(அவற்றின் மூழ்கி) துன்பப் படும் இவ்வுடல் உடையேன்,—நல்லில்பொரு=நன்மார்க்கத்தில் தரி யாத,— சமயம்ஆறின் பல்அத்த மார்க்க=அறுவகைச்சமயத்துப் பல பொருள் மார்க்கத்தையுடைய,—வல் அர்க்கா மூர்க்கர்=வல்லரக்கரா கிய மூர்க்கர்களுடைய,—கல்விக் கலாத்து அலையல் ஆமோ=(குதர்க் கவாதக்) கல்விப்போரிலேயும் புகுந்துவருந்தலாகுமோ?— அல்லை கொல் வார்த்தை சொல்லிக்கு=இராக்காலம் ஒழியாதா என்னும் சொல்லையுடைய ஒருதலைக் காமமுற்ற தலைவிக்கு,—இதம் ஒத்து சொல்=இதமாக அவளோடொத்து இரவை யொழிக்கும் குரலாகக் கொக்கரிக்கின்ற,—குக்குடம் ஆர்த்த இளையோனே=சேவலைக் கொடியின்கண் ஆர்த்த முருகனே!—அல்லுக்கும்ஆற்றின்எல்லுக்கும் மேல்=இரவையும் சிறிது வழிதெரிவிக்கும் பகலையுங்கடந்தமேலிடத்தில், அதாவது கேவல சகலம் கடந்த சுத்தநிலையில்,—புல்கு எல்லை படா கருணைவேளே=எழுந்தருளி யிருக்கின்ற அளவுபடாத தயாசமுத்திர மாகிய அழகனே!—வல்ஐக்கும் ஏற்றர்=வலிய அழகாகியஇடப வாக னத்தையுடையவரும்,—தில்லைக்கும்ஏற்றர் வல்லிக்கும்ஏற்றர்=தில் லைப் பதிக்கும் சிவகாம வல்லிக்கும்ஏற்றவருமாகியசிவபெருமான்,— அருள்வோனே=ஈன்றருளியகுமாரனே!—வள்ளிக்குழாத்துவள்ளிக் கல்காத்த=கூட்டமாகிய வள்ளிக் கொடிகளடர்ந்த வள்ளிமலையைக் காத்த,—வள்ளிக்குவாய்த்தபெருமாளே=வள்ளிநாயகியார்க்கு வாய்த்த பெருமாளே.— எ - று.

291. அல்லசலடைந்த வில்லடலனங்கன்
அல்லிமலரம்பு தனையேவ.
அள்ளியெரிசிந்த பிள்ளைமதிதென்ற
லையமுதுகிண்ட அணையூடே;
சொல்லுமரவிந்த வல்லிதனிநின்று
தொல்லைவினையென்று முனியாதே.
துய்யவரிவண்டு செய்யமதுவுண்டு
துள்ளியகடம்பு தரவேணும்;
கல்லசலமங்கை யெல்லையில்லெதிர்ந்து
கையில்வலிகண்ட குமரேசா.

கள்ளுலவுகொன்றை வள்ளல்தொழஅன்று
கல்விகரைகண்ட புலவோனே;
வல்சுரரஞ்ச நல்லசுரர்விஞ்ச
வல்லமைதெரிந்த மயில்வீரா-
வள்ளிபடர்கின்ற வள்ளிமலைசென்று
வள்ளியைமணந்த பெருமாளே. (எ)

292. ககனமு*மனிலமு மனல்புனல்நிலமமை
கள்ளப்புலாற்கி ருமிவீடு-
கனலெழமொழிதரு சினமெனமதமிகு
கள்வைத்ததோற்பை சுமவாதே;
யுகஇறுதிகளிலு மிறுதியிலொருபொருள்
உள்ளக்கணேக்கு மறிவூறி-
ஒளிதிகழுருவுரு வெனுமறையிறுதியி
லுள்ளத்தைநோக்க அருள்வாயே;
ம்ருகமதபரிமள விகசித†நளினநள்
வெள்ளைப்பிராட்டி இறைகாணு-
விடதரகுடிலச டிலமிசைவெகுமுக
வெள்ளத்தையேற்ற பதிவாழ்வே;
வருளமுமுகுளித‡வழைகளுமலிபுன
வள்ளிக்§குலாத்தி கிரிவாழும்-
வனசரர்மரபினில் வருமொருமரகத
வள்ளிக்குவாய்த்த பெருமாளே. (அ)

3. சிரமங்கமங்கைகண் செவிவஞ்சநெஞ்சு ‖ செஞ்
சலமென்புதிண்பொருந் திடுமாயம்-

---

* அனிலம்=காற்று. † நளினநள் வெள்ளைப்பிராட்டி இறை = சரஸ்வதிதேவியின் நாயகனுனபிரமன். ‡ வழை=சுரபுன்னை.
§ குலத்திகிரி என்பது குலாத்திகிரி என்றாயிற்று. வள்ளிக்குலத்திகிரி=சிரேஷ்டமாகிய வள்ளிமலை. ‖ செஞ்சலம்=இரத்தம்,

சிலதுன்பமின்ப*மொன் றிறவந்துபின்புசெந்
தழலின்கண்வெந்துசிந் திடஆவி;
விரைவின்கணந்தகன் பொரவந்ததென்றுவெந்
துயர்கொண்டலைந்துலைந் தழியாமுன்-
வினையொன்றுமின்றிநன் றியலொன்றிநின்பதம்
வினவென்றுஅன்புதந் தருள்வாயே;
அரவின்கண்முன்துயின் றருள்கொண்டலண்டர்கண்
டமரஞ்சமண்டிவந் திடுசூரன்-
அகலம்பிளந்தணைந் தகிலம்பரந்திரங்
கிடஅன்றுடன்றுகொன் றிடும்வேலா;
மரைவெங்கயம்பொருந் திடவண்டினங்குவிந்
திசையொன்றமந்திசந் துடனுடும்-
வரையின்கண்வந்துவண் குறமங்கைபங்கயம்
வரநின்றுகும்பிடும் பெருமாளே. (௬)

294. வரைவில்பொய்மங்கையர் தங்களஞ்சன
விழியையுகந்துமு கந்துகொண்டடி
வருடிநிதம்பம ளைந்துதெந்தென அளிகாடை-
மயில்குயிலன்றிலெ னும்புளின்பல
குரல்செய்திருந்துபி னுந்தியென்கிற
மடுவில்விழுந்துகி டந்துசெந்தழல் மெழுகாகி;
உருகியுகந்திதழ் தின்றுமென்றுகை
யடியினகங்கள்வ ரைந்துகுங்கும
உபயதனங்கள்த தும்பஅன்புட னணையாமஞ்-
சுலவியகொண்டைகு லைந்தலைந்தெழ
அமளியில்மின்சொல்ம ருங்கிலங்கிட
உணர்வழியின்பம றந்துநின்றனை நினைவேனோ;

---

* ஒன்றிற=ஒன்றி+இற.

விரவிநெருங்குகு ரங்கினங்கொடு
மொகுமொகெனுங்கட லுங்கடந்துறு
விசைகொடிலங்கைபு குந்தருந்தவர் களிகூர-
வெயில்நிலவும்பரு மிம்பரும்படி
ஜெயஜெயவென்றுவி டுங்கொடுங்கணை
விறல்நிருதன்தலை சிந்தினன்திரு மருகோனே;
அருகர்கணங்கள்பி ணங்கிடும்படி
மதுரையில்வெண்பொடி யும்பரந்திட
அரகரசங்கர வென்றுவென்றருள் புகழ்வேலா-
அறம்வளர்சுந்தரி மைந்ததண்டலை
வயல்கள்பொருந்திய சந்தவண்கரை
*யரிவைவிலங்கலில் வந்துகந்தருள்
பெருமாளே. (௧0)

## திருக்கழுக்குன்றம்.

•295. அகத்தினைக்கொண் டிப்புவிமேல்சில
தினத்துமற்றொன் றுற்றறியாதுபின்
அவத்துள்வைக்குஞ் சித்தசனூடு கணையாலே-
அசுத்தமைக்கண் கொட்புறுபாவையர்
நகைத்துரைக்கும் பொய்க்கடல்மூழ்கியெ
அலக்கணிற்சென் றுத்தடுமாறியெ சிலநாள்போய்;
இகத்தைமெய்க்கொண் டிப்புவிபாலர்பொன்
மயக்கிலுற்றம் பற்றைவிடாதுட
லிளைப்பிரைப்பும் பித்தமுமாய்நரை முதிர்வாயே-
எமக்கயிற்றின் சிக்கினிலாமுனுன்
மலர்ப்பதத்தின் பத்திவிடாமன
திருக்குநற்றொண் டர்க்கிணையாகவு
னருள்தாராய்;

* அரிவை விலங்கல்=வள்ளிமலை.

புகழ்ச்சிலைக்கந் தர்ப்பனுமேபொடி
படச்சிரித்தண் முப்புரம்நீறுசெய்
புகைக்கனற்கண் பெற்றவர்காதலி யருள்பாலா-
புவிக்குள்யுத்தம் புத்திரர்சேயரா
சனைத்துமுற்றுஞ் செற்றிடவேபகை
புகட்டிவைக்குஞ்சக்கரபாணிதன்மருகோனே;
திகழ்க்கடப்பம் புஷ்பமதார்புய
மறைத்துருக்கொண் டற்புதமாகிய
தினைப்புனத்தின் புற்றுறைபாவையையணைசிலா-
செகத்திலுச்சம் பெற்றமராவதி
யதற்குமொப்பென் றுற்றழகேசெறி
திருக்கழுக்குன் றத்தினில்மேவிய பெருமாளே.

296. மலைக்கனத்தென மார்பினிலேயிரு
முலைக்கனத்துற வேயிடைநூலென
*வளைத்துருப்பமை யார்குழல்தோளொடும் அலைமோத-
மயிற்குலத்தவ ராமெனநீள்கலை
நெகிழ்த்துவித்திரு வார்விழிவேல்கொடு
மயக்கிநத்தினர் மேல்மறுபாடுமவ் விழியேவி;
விலைக்கெனத்தன மாயிரமாயிர
முலைக்களப்பினு மாசைபொதாதென
வெறுப்பர்குத்திர காரியர்வேசையர்மயல்மேலாய்-
வெடுக்கெடுத்தும காபிணிமேலிட
முடக்கிவெட்கும தாமதவீணனை
மினற்பொலிப்பத மோடுறவேயருள் புரிவாயே;
அலைக்கடுத்தசு ரார்பதிகோவென
விடப்பணச்சிர மாயிரசேடனும்
அதிர்த்திடக்கதிர் வேல்விடுசேவக மயில்வீரா-

* வளைத்து உருப்ப=வளைத்துவிட.

அடைக்கலப்பொரு ளாமெனநாயெனை
அழைத்துமுத்திய தாமனுபூதியெ
னருட்டிருப்புக ழோதுகவேல்மயி
லருள்வோனே;

இலக்கைமுப்புரம் நீறெழவேதிரு
வுளத்திலற்பமெ ணுகினைதேசிகர்
சிறக்கமுத்தமி ழாலொருபாவக மருள்பாலா-

திருக்கடப்பலர் சூடியவார்குழல்
குறத்திகற்புட னேவிளையாடியொர்
திருக்கழுக்குணில் வாழ்முருகாசுரர்
பெருமாளே. (உ)

297. *எழுகுநிறைநாபி அரிபிரமர்சோதி
யிலகுமரன்மூவர் முதலானோர்-

இறைவியெனுமாதி பரைமுலையினூறி
யெழுமமிர்தநாறு கனிவாயா;

புழுகொழுகுகாழி கவுணியரில்ஞான
புனிதனெனஏடு தமிழாலே-

புனலிலெதிரேற சமணர்கழுவேற
பொருதகவிவீர குருநாதா;

மழுவுழைகபால டமரகத்ரிசூல
மணிகரவிநோத ரருள்பாலா-

மலரயனைநீடு சிறைசெய்தவன்வேலை
வளையைபெறவேசெய் முருகோனே;

கழுகுதொழுவேத கிரிசிகரிவீறு
கதிருலவுவாசல் நிறைவானோர்-

கடலொலியதான மறைதமிழ்களோது
†கதலிவனமேவு பெருமாளே. (௩)

---

* எழுகு=எழுலகம். † கதலிவனம் என்பது திருக்கழுக்குன்றம்.

298. குடங்கள்நிரைத்தேறு தடங்கள்குறித்தார
வடங்கள்*அசைத்தார செயநீலம்-
†குதம்பையிடத்தேறு வடிந்த‡குழைக்காது
குளிர்ந்தமுகப்பார்வை வலையாலே;
உடம்புமறக்கூனி நடந்துமிசச்சாறி
யுலந்துமிகக்கோலு மகலாதே-
உறங்கிவிழிப்பாய பிறந்தபிறப்பேனு
முரங்கொளபொற்பாத மருள்வாயே;
விடங்கள்கதுப்பேறு §படங்கணடித்தா ‖ ட
விதங்கொள்முதற்பாய லுறைமாயன்-
¶விலங்கைமுறித்தோடி யிடங்கள்வளைத்தேறு
விளங்குமுகிற்கான மருகோனே;
தடங்கொள்வரைச்சாரல் நளுங்குமயிற்பேடை
தழுங்குமயற்பாடி யளிசூழத்-
தயங்குவயற்சாரல் குரங்குகுதித்தாடு
தடங்**கதலிக்கான பெருமாளே. (ச)

மயிலம்.

299. கொலைகொண்டபோர்விழி கோலோவாளோ
விடமிஞ்சுபாதக வேலோசேலோ
குழைகொண்டுலாவிய மீனோமானோ எனுமானார்-
குயில்தங்குமாமொழி யாலேநேரே
யிழைதங்குநூலிடை யாலேமீதூர்
குளிர்கொங்கைமேருவி னாலேநாளு விதமாகி;

*அசைத்தார=அசைத்தவர்களுடைய.
†குதம்பை=காதுவளர்க்கும்தக்கை.
‡ குழைக்காது=குழையைக்காதுகின்ற.
§ படங்கணடித்தாடு=காளிங்கனது படத்தின் மீது ஆடி நடிக்கும். ‖ அவிதம் கொள்முதல் பாயல்=அத்தகைமைகொண்டசர்ப்பசயனம். ¶ வில் அங்கைமுறித்து=வில்லைக் கையால் முறித்து.
** கதலிக்கானம் என்பதும் திருக்கழுக்குன்றம்.

உலைகொண்டமாமெழு காயேமோகா
யலையம்புராசியி னூடேமூழ்கா
வுடல்பஞ்சபாதக மாயாநோயா  லழிவேனோ-
உறுதண்டபாசமொ டாராவாரா
எனையண்டியேநம னார்தூதானோர்
உயிர்கொண்டுபோய்விடும் நாள்நீமீதா
ளருள்வாயே;
அலைகொண்டவாரிதி கோகோகோகோ
எனநின்றுவாய்விட வேநீள்மாகு
ரணியஞ் *சராசனம் வேறாய்நீறா  யிடவேதான்-
அவிர்கின்றசோதிய வாரார்நீள்சீ
ரனலங்கைவேல்விடும் வீராதீரா
அருமந்தரூபக ஏகாவேறோர்  வடிவாகி;
மலைகொண்டவேடுவர் கானூடேபோய்
குறமங்கையாளுட னேமாலாயே
மயல்கொண்டுலாயவள் தாள்மீதேவீழ்குமரேசா-
மதிமிஞ்சுபோதக மேலாஆளா
மகிழ்சம்புவேதொழு பாதாநாதா
மயிலந்தண்மாமலை வாழ்வேவானோர்
பெருமாளே.

## திரிசிராப்பள்ளி.

300. அங்கைநீட்டிய ழைத்துப்பாரிய
கொங்கைகாட்டிம றைத்துச்சீரிய
அன்புபோற்பொய்ந டித்துக்காசள  வுறவாடி-
அம்புதோற்றக ணிட்டுத்தோதக
இன்பசாத்ரமு ரைத்துக்கோகிலம்
அன்றில்போற்குர லிட்டுக்கூரிய  நகரேகை;

---

* சராசனம்=வில்.

பங்கமாக்கிய லேத்துத்தாடனை
கொண்டுவேட்கையெ ழுப்பிக்காமுகர்
பண்பில்வாய்க்கம யக்கிக்கூடுத வியல்பாக-
பண்டிராப்பகல் சுற்றுச்சூளைகள்
தங்கள்மேற்ப்ரமை விட்டுப்பார்வதி
பங்கர்போற்றிய பத்மத்தாள்தொழ
அருள்வாயே;
எங்குமாய்க்குறை வற்றுச்சேதன
அங்கமாய்ப்பரி சுத்தத்தோர்பெறும்
இன்பமாய்ப்புகழ் முப்பத்தாறின்ன் முடிவேருய்-
இந்த்ரகோட்டிம யக்கத்தான்மிக
மந்த்ரமூர்த்தமெ டுத்துத்தாமத
மின்றிவாழ்த்திய சொர்க்கக்காவல வயலூரா;
செங்கைவேற்கொடு துட்டச்சூரனை
வென்றுதோற்பறை கொட்டக்கூளிகள்
தின்றுகூத்துந டிக்கத்தோகையில் வரும்வீரா-
செம்பொனூற்றிகழ் சித்ரக்கோபுர
மஞ்சிராப்பகல் மெத்தச்சூழ்தரு
தென்சிராப்பளி வெற்பிற்றேவர்கள்
பெருமாளே. (க)

301. அந்தோமன மேமதாக்கையை
நம்பாதெயி தாகிதசூத்திர
மம்போருக ளுடியபூட்டிது இனிமேல்நாம்-
அஞ்சாதமை யாகிரியாக்கையை
பஞ்சாடிய வேலவனுர்க்கிப
லங்காகுவம் வாஇனிதாக்கையை ஒழியாமல்;
வந்தோமிது வேகதியாட்சியு
மிந்தாமயில் வாகனர்சீட்டிது
வந்தாளுவம் நாமெனவீக்கிய சிவநீறும்-

வந்தேவெகு வாரணமையாட்கொளு
வந்தார்மத மேதினிமேற்கொள
மைந்தாகும ராவெனுமார்ப்புய மறவாதே;

திந்தோதிமி தீததமாத்துடி
தந்தாதன னாதனதாத்தன
செம்பூரிகை பேரிகையார்த்தெழ மறையோத-

செங்காடென வேவருமூர்க்கரை
சங்கார சிகாமணிவேற்கொடு
திண்டாடிமகாமயில்மேற்கொளுமுருகோனே;

இந்தோடிதழ் நாக*மகாக்கடல்
கங்காளமி னார்சடைசூட்டிய
என்தாதைச தாசிவகோத்திர னருள்பாலா-

எண்கூடரு ளால்நெளவிநோக்கியை
நன்பூமண மேவிசிராப்பளி
யென்பார்மன மேதினிநோக்கிய பெருமாளே.

302. அரிவையர் நெஞ்சுருகாப்புணர்
தருவிர கங்களினூற்பெரி
தவசம்வி ளைந்துவிடாய்த்தடர் முலைமேல்வீழ்ந்-

தகிலொடு சந்தனசேற்றினில்
முழுகியெ ழுந்தெதிர்கூப்புகை
யடியின கம்பிறைபோற்பட விளையாடி;

பரிமளம் விஞ்சியபூக்குழல்
சரியம ருங்குடைபோய்ச்சில
பறவைக ளின்குரலாய்க்கயல் விழிசோர-

பனிமுகமுங்குறுவேர்ப்பெழ
இதழமு துண்டிரவாய்ப்பகல்
பகடிபி டும்படிதூர்த்தனை விடலாமோ;

* மகாக்கடல்=பெருக்கடல்போல் பெருகிவந்த கங்கை.

சரியையு டன்க்ரியைபோற்றிய
பரமபதம்பெறுவார்க்கருள்
தருகணன் ரங்கபுரோச்சிதன் மருகோனே-
சயிலமெ றிந்தகைவேற்கொடு
மயிலினில் வந்தெனையாட்கொளல்
சகமறி யும்படிகாட்டிய குருநாதா;
திரிபுவனந்தொழுபார்த்திபன்
மருவிய மண்டபகோட்டிகள்
தெருவில்வி ளங்குசிராப்பளி மலைமீதே-
திரியஇ ருந்தபராக்ரம
உருவளர் குன்றுடையார்க்கொரு
திலகமெ னும்படிதோற்றிய பெருமாளே.(ரு)

303. அழுதழு தாசாரநேசமு
முடையவர் போலேபொய்சூழ்வுறும்
அசடிகள் மாலானகாமுகர் பொன்கொடாநாள்-
அவருடன் வாய்பேசிடாமையு
முனிதலு மாறுததோஷிகள்
அறுதியில் காசாசைவேசைகள் நஞ்சுதோயும்;
விழிகளி னல்மாடவீதியில்
முலைகளை யோராமலாரொடும்
விலையிடு மாமாயரூபிகள் பண்பிலாத-
விரகிகள் வேதாளமோவென
முறையிடு கோமாளமூளிகள்
வினைசெய லாலேயெனாவியு யங்கலாமோ;
வழியினில் வாழ்ஞானபோதக
பரமசு வாமீவரோதய
வயலியில் வேலாயுதாவனை யெங்குமானை-
மதுரையின் மீதாலவாயினில் .
எதிரம ணாரோரெணாயிரர்
மறிகழு மீதேறநீறுப ரந்துலாவச்:

செழியனு மாளாகவாதுசெய்
கவிமத சிகாமிமா*முனி
சிவசிவ மாதேவகாவென வந்துபாடும்-
திருவுடை யாய்தீதிலாதவர்
உமையொரு பாலானமேனியர்
†சிரகிரி வாழ்வானதேவர்கள் தம்பிரானே. (ச)

304. இளையவர்நெஞ்சத் ‡தளையமெனுஞ்சிற்
றிடைகொடுவஞ்சிக் கொடிபோல்வார்-
இணையடிகும்பிட் டணியல்குல்பம்பித்
திதழமுதுந்துய்த் தணியாரக்;
களபசுகந்தப் புளகிதஇன்பக்
கனதனகும்பத் திடைமூழ்கும்-
கலவியைநிந்தித் திலகியநின்பொற்
கழல்தொழுமன்பைத் தருவாயே;
தளர்வறுமன்பர்க் குளமெனுமன்றிற்
சதுமறைசந்தத் தொடுபாட-
தரிகிடதர்தத் திரிகிடதிந்தித்
தகுர்தியெனுங்கொட் டெனுடித்;
தெளிவுறவந்துற் றொளிர்சிவனன்பிற்
சிறுவஅலங்கற் றிருமார்பா-
செழுமறையஞ்சொற் பரிபுரசண்டத்
திரிசிரகுன்றப் பெருமாளே. (ரு)

305. பகலவனொக்குங் கனவியரத்னம்
பவளவெண்முத்தந் திரமாகப்-
பயிலமுலைக்குன் றுடையவர்சுற்றம்
பரிவெனவைக்கும் பணவாசை;
அகமகிழ்துட்டன் பகிடிமருட்கொண்
டழியுமவத்தன் குணவீனன்-

---

* முனி=யானைக்கன்று.
† சிரகிரி யென்பது திரிசிராப்பள்ளி. ‡ தளையம்=விலங்கு.

அறிவிலிசற்றும் பொறையிலிபெற்றுண்
டலைதலொழித்தென் றருள்வாயே;
சகலருமெச்சும் பரிமளபத்மத்
தருணபதத்திண் சுரலோகத்-
தலைவர்மகட்கும் குறவர்மகட்கும்
தழுவஅணைக்குந் திருமார்பா;
செகதலமெச்சும் புகழ்வயலிக்குந்
திகுதிகெனப்பொங் கியவோசை-
திமிலைதவிற்றுந் துமிகள்முழக்குஞ்
சிரகிரிநிற்கும் பெருமாளே. (௬)

306. ஒருவரொடுகண்கள் ஒருவரொடுகொங்கை
ஒருவரொடுசெங்கை யுறவாடி-
ஒருவரொடுசிந்தை ஒருவரொடுநிந்தை
ஒருவரொடுரண்டு முறையாளை;
மருவமிகஅன்பு பெருகவுளதென்று
மனநினையுமிந்த மருள்தீர-
வனசமெனவண்டு தனதனனவென்று
மருவுசரணங்க ளருளாயோ;
அரவமெதிர்கண்டு நடுநடுநடுங்க
அடவிடுப்ரசண்ட மயில்வீரா-
அமரர்முதலன்பர் முனிவர்கள்வணங்கி
அடிதொழவிளங்கு மழகோனே;
தெரிவையொருபங்கர் கருணைபொழிகின்ற
திருவடிகிளர்ந்து நடமாட-
திகுதிகுதியென்று தகுதிகள்முழங்கு
த்ரிசிரகிரிவந்த பெருமாளே. (எ)

307. குமுதவாய்க்கனி யமுதவாக்கினர்
கோலேவேலேசேலேபோலே அழகான-
குழைகள்தாக்கிய விழிகளாற்களி
கூராவீறுதீராமாலா யவரோடே;

உமதுதோட்களி லெமதுவேட்கையை
ஓரீர்பாரீர்வாரீர்சேரீர் எனவேநின்-
றுடைதொடாப்பண மிடைபொருத்தன
மூடேவீழ்வேனீடேறுதே யுழல்வேனோ;
தமரவாக்கிய அமரர்வாழ்த்திய
தாதாவேமாஞாதாவேதோ கையிலேறி-
சயிலநாட்டிறை வயலிநாட்டிறை
சாவாமூவாமேவாநீவா இளையோனே;
திமிராக்கதர் சமரவேற்கர
தீராவீராநேராதோரா உமைபாலா-
திரிசிராப்பளி மலையின்மேற்றிகழ்
தேவேகோவேவேளேவானோர் பெருமாளே. ()

308. குவளைபூசல்வி ளைத்திடுமெங்கயல்
கடுவதாமெனு மைக்கண்மடந்தையர்
குமுதவாயமு தத்தைநுகர்ந்திசை பொருகாடை-
குயில்புறுமயில் *குக்கில்சுரும்பினம்
வன†பதாயுத மொக்குமெனும்படி
குரல்விடாஇரு பொற்குடமும்புள கிதமாக;
பவளரேகைப டைத்ததராங்குறி
யுறவியாளப டத்தையணைந்துகை
பரிசதாடன மெய்க்கரணங்களின் மதநூலின்-
படியிலேசெய்து ருக்கிமுயங்கியெ
அவசமாய்வட பத்ரநெடுஞ்சுழி
படியுமோகச முத்ரமழுந்துத லொழிவேனோ;
தவளரூப‡ச ரச்சுதியிந்திரை
ரதிபுலோமசை க்ருத்திகைரம்பையர்
சமுகசேவித துர்க்கைபயங்கரி புவனேசை-

*குக்கில்=செம்போத்து. †பதாயுதம்=கோழி. ‡சரச்சுதி=சரஸ்வதி

சகலகாரணி சத்திபரம்பரி
யிமயபார்வதி ருத்ரிநிரஞ்சனி
சமயநாயகி நிஷ்களிகுண்டலி யெமதாயி;
சிவைமனோன்மணி சிற்சுகசுந்தரி
கௌரிவேதவி தக்ஷணியம்பிகை
த்ரிபுரையாமளை யற்பொடுதந்தருள் முருகோனே-
சிகரகோபுர சித்திரமண்டப
மகரதோரண ரத்னஅலங்க்ருத
திரிசிராமலை அப்பர்வணங்கிய பெருமாளே. (௯)

309. சத்திபாணீநமோநம முத்திஞானீநமோநம
தத்வவாதீநமோநம விந்துநாத-
சத்ருபாநமோநம ரத்நதீபாநமோநம
தற்பரதாபாநமோநம என்றுபாடும்;
பத்திபூணுமவேயுல கத்தின்மானுர்சவாதகில்
பச்சைபாடீரபூஷித கொங்கைமேல்வீழ்-
பட்டிமாடானநானுனை விட்டிராமே*யுலோகித
பத்மசீர்பாதநீயினி வந்துதாராய்;
அக்ரதேவாயுதாசுர ருக்ரசேனாபதீசுசி
யர்க்ய†சோமாசியாகுரு சம்ப்ரதாயா-
அர்ச்சனாவாகனாவய லிக்குள்வாழ்நாயகாபுய
‡அட்சமாலாதராகுற மங்கைகோவே;
சித்ரகோலாகலாவிர லக்ஷ்மிசாதாரதாபல
திக்குபாலாசிவாகம தந்த்ரபோதா-
சிட்டநாதாசிராமலை யப்பர்வாழ்மகாவ்ருத
தெர்ப்பையாசாரவேதியர் தம்பிரானே. (௧0)

---

* உலோகிதம்=செம்மைநிறம். † சோமாசி=யாககர்த்தா.

‡ அட்சமாலா=ருத்திராக்ஷமாலிகை.

310. பகலிரவினிற் றடுமாறு-
பதிகுருவெனத் தெளிபோத;
ரகசியமுரைத் தநுபூதி-
ரதநிலைதனைத் தருவாயே;
இகபரமதற் கிறையோனே-
இயலிசையின்முத் தமிழோனே;
சகசிரகிரிப் பதிவேளே-
சரவணபவப் பெருமாளே. (கக)

311. புவனத்தொருபொற் றொடிசிற்றுதரக்
கருவிற்பவமுற் றுவிதிப்படியிற்
புணர்துக்கசுகப் பயில்வுற்றுமரித் திடலாவி-
புரியட்டகமிட் டதுகட்டியிறுக்
கடிகுத்தெனஅச் சம்விளைத்தலறப்
புரள்வித்துவருத் திமணற்சொரிவித்
தனலூடே;
தவனப்படவிட் டுயிர்செக்கிலரைத்
தணிபற்களுதிர்த் தெரிசெப்புருவைத்
தழுவப்பணிமுட் களில்கட்டியிசித் திடவாய்கண்-
சலனப்படஎற் றியிறைச்சியறுத்
தயில்வித்துமுரித் துநெரித்துளையத்
தளையிட்டுவருத் தும்யமப்ரகரத் துயர்தீராய்;
பவனத்தையொடுக் குமனக்கவலைப்
ப்ரமையற்றைவகைப் புலனிற்கடிதிற்
படரிச்சையொழித் ததவச்சரியைக்
க்ரியையோகர்-
பரிபக்குவர்நிட் டைநிவிர்த்தியினிற்
பரிசுத்தர்விரத் தர்கருத்ததனிற்
பரவப்படுசெய்ப் பதியிற்பரமக் குருநாதா;
சிவனுத்தமனித் தவுருத்திரன்முக்
கணனக்கன்மழுக் கரனுக்ரரணத்
த்ரிபுரத்தையெரித் தருள்சிற்குணநிற் குணஞானி-

செகவித்தனிசப் பொருள்சிற்பரனற்
புதனுெப்பிலியுற் பவபத்மதடத்
த்ரிசிரப்புரவெற் புறைசற்குமரப் பெருமாளே.

312. பொருளின்மேற்ப்ரிய காமாகாரிகள்
பரிவுபோற்புணர் க்ரீடாபீடிகள்
புருஷர்கோட்டியில் நாணுமோடிகள்
கொங்கைமேலே.

புடைவைபோட்டிடு மாயாரூபிகள்
மிடியராக்குபொ லாமூதேவிகள்
புலையர்மாட்டுமெ ருதேகூடிகள் நெஞ்சமாயம்;

கருதொணுப்பல கோடாகோடிகள்
விரகினுற்பலர் மேல்வீழ்வீணிகள்
கலவிசாத்திர நூலேயோதிகள் தங்களாசைக்-

கவிகள்கூப்பிடு மோயாமாரிகள்
அவசமாக்கிடு பேய்நீரூணிகள்
கருணைநோக்கமி லாமாபாவிக ளின்பமாமோ;

குருகடாக்ஷக லாவேதாகம
பரமவாக்கிய ஞானசாரிய
குறைவுதீர்த்தருள் ஸ்வாமீகார்முக வன்பரான

கொடியவேட்டுவர் கோகோகோவென
மடியநீட்டிய கூர்வேலாயுத
குருகுக்ஷேத்ரபு ரேசாவாசுகி அஞ்சமாறும்;

செருபராக்ரம *கேகேவாகன
சரவணேற்பவ மாலாலாளித
திரள்புயாத்திரி யீராறுகிய கந்தவேளே-

சிகரதீர்க்கம காசிகோபுர
முகசடாக்கர சேணுடாக்ருத
திரிசிராப்பளி வாழ்வேதேவர்கள்
தம்பிரானே. (௧௩)

* கேகயம்=மயில்.

313. பொருள்கவர்சிந்தை அரிவையர்தங்கள்
புழுககில்சந்து பனிநீர்தோய்-
புளகிதகொங்கை யிளகவடங்கள்
புரளமருங்கி லுடைசோர;
இருள்வளர்கொண்டை சரியஇசைந்து
இணைதருபங்க அனுராகத்-
திரிதலொழிந்து மனதுகசிந்து
னிணையடியென்று புகழ்வேனோ;
மருள்கொடுசென்று பரிவுடனன்று
மலையில்விளைந்த தினைகாவல்-
மயிலைமணந்த அயிலவளங்கள்
வயலியில்வந்த முருகோனே;
தெருளுறுமன்பர் பரவவிளங்கு
திரிசிரகுன்றில் முதனுளில்-
தெரியஇருந்த பெரியவர்தந்த
சிறியவஅண்டர் பெருமாளே. (கச)

314. வாசித்துக் காணொணாதது
பூசித்துக் கூடொணாதது
வாய்விட்டுப்பேசொணாதது நெஞ்சிலே-
மாசர்க்குத் தோணொணாதது
நேசர்க்குப் பேரொணாதது
மாயைக்குச் சூழொணாதது விந்துநாத;
ஓசைக்குத் தூரமானது
மாகத்துக் கீறதானது
லோகத்துக் காதியானது கண்டுநாயேனை-
யோகத்தைச் சேருமாறுமெய்
ஞானத்தைப் போதியாயினி
யூனத்தைப் போடிடாதும யங்கலாமோ;

ஆசைப்பட் டேனல்காவல்செய்
வேடிச்சிக் காகமாமய
லாகிப்பொற் பாதமேபணி கந்தவேளே-

*ஆலித்துச் சேல்கள்பாய்வய
லாரத்திற் காளமோடட
ராரத்தைப் பூண்மயூரது ரங்கவீரா;

நாசிக்குட் ப்ராணவாயுவை
ரேசித்தெட் டாதயோகிகள்
நாடிற்றுக் காணொணாதென நின்றநாதா-

நாகத்துச் சாகைபோயுயர்
மேகத்தைச் சேர்சிராமலை
நாதர்க்குச் சாமியேசுரர் தம்பிரானே. (௧௫)

315. வெருட்டியாட்கொளும் விடமிகள்புடைவையை
நெகிழ்த்தணைப்பிகள் படிறிகள்சடுதியில
விருப்பமாக்கிகள் விரவியதிரவிய மிலரானல்-

வெறுத்துநோக்கிகள் கபடிகள்நடமிடு
பதத்தர்தூர்த்திகள் ம்ருகமதபரிமள
விசித்ரமேற்படு முலையினுநிலையினு
மெவரோடும்;

மருட்டிவேட்கைசொல் மொழியினும்விழியினு
மகிழ்த்தபூக்கமழ் குழலினுநிழலினும்
மதிக்கொணாத்தள ரிடையினுநடையினு
மவமேயான்-

மயக்கமாய்ப்பொருள் வரும்வகைக்ருஷிபணு
தடத்துமோக்ஷம தருளியபலமலர்
மணத்தவார்க்கழல் கனவிலுநனவிலு
மறவேனே;

---

* ஆலித்து=களித்து.

இருட்டிலாச்சுர ருலகினிலிலகிய
சகஸ்த்ரநேத்திர முடையவன்மிடியற
இரக்ஷைவாய்த்தருள் முருகபணிருகர குகவீரா-
இலக்ஷுமீச்சுர பசுபதிகுருபர
சமஸ்தராச்சிய ந்ருபபுகழ்வயமியல்
இலக்கரேய்ப்படை முகடெழுககபதி களிகூர;
திருட்டுராக்ஷதர் பொடிபடவெடிபட
எடுத்தவேற்கொடு கடுகியமுடுகிய
செருக்குவேட்டுவர் திறையிடமுறையிட
மயிலேறும்-
செருப்பராக்ரம நிதிசரவணபவ
சிவத்தபாற்கர னிமகரன்வலம்வரு
திரிச்சிராப்பளி மலைமிசைநிலைபெறு
பெருமாளே. (௧௬)

## திருக்கற்குடி.

316. குடத்தைத்தகர்த்துக் களிற்றைத்துரத்திக்
குவட்டைச்செறுத்துக் ககசாலக்-
குலத்தைக்குமைத்துப் பகட்டிச்செருக்கிக்
குருத்தத்துவத்துத் தவர்சோரப்;
புடைத்துப்பணைத்துப் பெருக்கக்கறுத்துப்
புறப்பட்டகச்சுத் தனமாதர்-
புணர்ச்சிச்சமுத்ரத் திளைப்பற்றிருக்கப்
புரித்துப்பதத்தைத் தருவாயே;
கடத்துப்புனத்துக் குறத்திக்குமெத்தக்
கருத்திச்சையுற்றுப் பரிவாகக்-
கணக்கப்ப்ரியப்பட் டகப்பட்டுமைக்கட்
கடைப்பட்டுநிற்கைக் குரியோனே;
தடத்துற்பவித்துச் சுவர்க்கத்தலத்தைத்
தழைப்பித்தகொற்றத் தனிவேலா-

தமிழ்க்குக்கவிக்குப் புகழ்ச்செய்ப்பதிக்குத்
தருக்கற்குடிக்குப் பெருமாளே. (க)

317. நெறித்துப் பொருப்புக்கொத்த
முலைக்குத் தனத்தைக்கொட்டி
நிறைத்துச் சுகித்துச்சிக்கி வெகுநாளாய்-
நினைத்துக் கொடத்துக்கத்தை
யவத்தைக் கடுக்கைப்பெற்று
நிசத்திற் சுழுத்திப்பட்ட அடியேனை;
இறுக்கிப் பிடித்துக்கட்டி
யுதைத்துந் துடிக்கப்பற்றி
யிழுத்துத் துவைத்துச்சுற்றி யமதூதர்-
எனக்குங் கணக்குக்கட்டு
விரித்துத் தொகைக்குட்பட்ட
இலக்கப் படிக்குத்தக்க படியேதான்;
முறுக்கித் திருப்பிச்சுட்டு
மலத்திற் புகட்டித்திட்டி
முழுக்கக் கலக்கப்பட்டு அலையாமல்-
மொழிக்குத் தரத்துக்குற்ற
தமிழ்க்குச் சரித்துச்சித்தி
முகத்திற் களிப்புப்பெற்று மயிலேறி;
உறுக்கிச் சினத்துச்சத்தி
யயிற்குத் தரத்தைக்கைக்கு
ளுநிக்கப் பணித்துப்பக்கல் வருவாயே-
உனைச்சொற் றுதிக்கத்தக்க
கருத்தைக் கொடுப்பைச்சித்தி
யுடைக்கற்குடிக்குட்பத்தர் பெருமாளே. (உ)

## இரத்நகிரி.

318. கயலைச்சருவிப் பிணையொத்தலர்பொற்
கமலத்தியல்ஙமக் கணிறலே-

கடிமொய்ப்புயலைக் கருதிக்கறுவிக்
கதிர்விட்டெழுமைக் குழலாலே;
சயபொற்கலசத் திணைவெற்பிணைமிக்
குளநற்பெருசெப் பிணையாலே-
கலமற்றறிவற் றுணர்வற்றனனற்
கதியெப்படிபெற் றிடுவேனோ;
புயலூற்றியல்மைக் கடலிற்புருகொக்
கறமுற்சரமுய்த் தமிழ்வோடும்-
பொருதிட்டமரர்க் குறுதுக்கமும்விட்
டொழியப்புகழ்பெற் றிடுவோனே;
செயசித்திரமுத தமிழுற்பவநற்
செபமுற்பொருளுற் றருள்வாழ்வே-
சிவதைப்பதிரத் தினவெற்பதனிற்
றிகழ்மெய்க்குமரப் பெருமாளே. (க)

319. பத்தியால்யானுனைப் பலகாலும-
பற்றியேமாதிருப் புகழ்பாடி;
முத்தனுமாறெனைப் பெருவாழ்வின்-
முத்தியேசேர்வதற் கருள்வாயே;
உத்தமாதானசற் குணர்நேயா-
ஒப்பிலாமாமணிக் கிரிவாசா;
வித்தகாஞானசத் திபாதா-
வெற்றிவேலாயுதப் பெருமாளே. (உ)

விராலிமலை.

320 இதமுறுவிரைபுனல் முழுகியகில்மண
முதவியபுகையினி லளவிவகைவகை
கொத்தளர்க ளின்தொடையல்
வைத்துவளர் கொண்டலென
அறலெனஇசையளி யெனநளிருளென
நிறமதுகருகிநெ டுகிநெறிவுபட

செய்த்துமுசு வின்திரிகை
யொத்தசுருள் குந்தளமும்
இலகியபிறையென எயினர்சிலையென
*விலகியதிலதநு தலுமதிமுகமும்
உற்பலமும் வண்டுவடு
விற்கணைய மன்''டரு முனைவாளும்-
இடர்படுகவுநடு வனும்வலடல்பொரு
கடுவதுமெனநெடி தடுவகொடியன
இக்குசிலை கொண்டமதன்
மெயத்தவசி றைந்தவிழி
தளவனமுறுவலு மமுதகுமுதமும்
விளைநறவினியமொ ழியுமினையதென
ஒப்பறுங கங்கள்விரல்
துப்பெனவு றைந்துகமு
கிடியொடிபடவினை செயும்வின்மதகலை
நெடிய†கவுடியிசை முரலுசுரிமுக
நத்தனைய கண்டமும்வெண்
முத்துவிளை‡விண்டனைய எழில்தோளும்;
விதரணமனவித னமறையருள்வன
சததளமரைமுகி ழதனைநிகர்வன
புத்தமிர்து கந்தகுடம்
வெற்பெனநி ரம்புவன
இமசலமிர்கமத களபபரிமள
தமனியப்ரபைமிகு தருணபுளகித
சித்ரவர மங்கலவி
சித்ரவிரு துங்ககன
விகலிதமிருதுள ம்ருதுளநவமணி
முகபடவிகடின தனமுமுயர்§வட
பத்திரமி ருந்தகடி
லொத்தசுழியுந்தியுள மதியாத-

---

* விலகிய=விசாலமான. † கவுடி என்பது ஓர்விதபண்.
‡ விண்டு=மூங்கில். § வடபத்திரம் இருந்த அகடில்=ஆலிலை போன்ற அடிவயிற்றில்.

விபரீதமுடையிடை யிளைஞர்களைபட
அபகடமதுபுரி யரவசுடிகைய
ரத்நபண மென்பவழ
குற்றவரை யும்புதிய
நுணியதளிரொனவு லவியபரிபுர
அணிநடனபதமு முடையவடிவினர்
பொற்கலவி யின்பமதி
துக்கமென லன்றியவர்
விரகினிலெனதுறு மனமதுருகிய
பிரமையுமறவுன தருள்கைவரவுயர்
பத்திவழி யும்பரம
முத்திநெறி யுந்தெரிவ தொருநாளே;

தததத தததத தததத தததத
திதிதி திதிதி திதிதி திதிதிதி
தத்ததத தந்ததத
தித்திதிதி திந்திதிதி
டகுடகு டிகுடிகு டகுகு டிகுடிகு
டிகுடிகு டகு'-கு டிகுகு டகுடகு
தத்ததிமி டங்குகுகு
தித்திதிமி டிங்குகுகு
தமிதமிதமிதக தமிதநிமிதக
திமிதிமிசெககண திமிதநிகதிக
தத்திமித தந்திமித
தித்திமிதி திந்திமிதி யெனவேதான்-
தபலைகுட-முழவு திமிலைபடகம
தபுதசலிஞைதவில் முரசுகரடிகை
மத்தளித வண்டையற
வைத்தகுணி துந்துமிகள்
மொகுமொகுமொகுவென அலறவிருதுகள்
திகுதிகுதிகுவென அலகைகுறளிகள்

விக்கிடகி ணம்பருக
*பக்கியுவ ணங்கழுகு
சதிர்பெறஅதிர்தர உததிசுவறிட்
எதிர்பொருநிருதர்கள் †குருதிபெருகிட
வப்புவின்மி தந்தெழுப
தற்புதக வந்தமெழ வெகுகோடி;
மதகஜதுரகர தமுமுடையபுவி
யதலமுதல்முடிய இடியநெடியதொர்
மிக்கொலிமு ழங்கஇரு
ளக்கணம்வி டிந்துவிட
இரவியுமதியமு நிலைமைபெறஅடி
பரவியஅமரர்கள் தலைமைபெறஇப
லத்திறல ணங்குசெய
சத்திவிடு கந்ததிரு
வயலியிலடிமைய குடிமையினலற
மயலொடுமலமற அரியபெரியதி
ருப்புகழ்வி ளம்புவென்மு
னற்புதமெ ழுந்தருள்கு கவிராலி-
மலையுறைகுரவந லிறைவவருகலை
பலதெரிவிதரண முருகசரவண
உற்பவக்ர வுஞ்சகிரி
நிக்ரகஅ கண்டமய
நிருபவிமலசுக சொருபபரசிவ
குருபரவெளிமுக டுருவவுயர்தரு
சக்ரகிரி யுங்குலைய
விக்ரமந டம்புரியு
மரகதகலபமெ ரிவிடுமயில்மிசை
மருவியெயருமைய இளமையுருவொடு
சொர்க்கதல மும்புலவர்
வர்க்கமும்வி ளங்கவரு பெருமாளே. (க)

* பக்கி=பக்ஷி. † 'குருதி பெருகிடு அவ் அப்புவில்மிதந்து எழுபது அற்புதகவந்தம் எழ' எனப்பிரிக்க.

321. உருவேறவேஜெபித்து வொருகோடியோமசித்தி
யுடனாகஆகமத்து கந்துபேணி-
உணர்வாசையாரிடத்து மருவாதுவோரெழுத்தை
யொழியாதுவூதைவிட்டி ருந்துநாளும்;
தரியாதபோதகத்தர் குருவாவரோரொருத்தர்
தருவார்கள்ஞானவித்தை தஞ்சமாமோ-
* தழலாடிவீதி † வட்ட மொளிபோதஞானசித்தி
தருமாகிலாகுமத்தை கண்டிலேனே;
குருநாடிராசரிக்கர் துரியோதனுதிவர்க்க
குடிமாளமாயமிட்டு குந்திபாலர்-
குலையாமல்நீதிகட்டி யெழுபாரையாளவிட்ட
குறளாகனூதில்நெட்டை கொண்டஆதி;
மருகாபுராரிசித்தன் மகனேவிராலிசித்ர
மலைமேலுலாவுசித்த அங்கைவேலா-
மதுராபுரேசர்மெய்க்க அரசாளுமாறன்வெப்பு
வளைகூனையேநிமிர்த்த தம்பிரானே. (உ)

322. எதிரெதிர்கண் டோடியாட்கள்
களவதறிந் தாசைபூட்டி
இடறிவிழும் பாழிகாட்டு மடமாதர்-
இறைவைகொளுங் கூவல்மூத்த
கறையொழுகுந் தாரைபார்க்கி
லிளமைகொடுங் காதலாற்றில் நிலையாத;
அதிவிகடம் பீழலாற்ற
அழுகிவிழும் பீறலூத்தை
அடையுமிடஞ் சீலைதீற்று திருவாயில்-
அருவிசலம் பாயுமோட்டை
அளைடவுகெடுந் தூரைபாழ்த்த
அளறிலழுந் தீமலாட்கொ டருள்வாயே;

* தழலாடிவீதி=நெற்றி. † வட்டம்=புருவமத்தியஸ்தானம்.

விதுரனெடுந் த்ரோணமேற்று
எதிர்பொருமம் பாதியேற்றி
விரகினெழுந் தோயதூற்று வருமாள-
விரவுஜெயன் *காளிகாட்டில்
வருதருமன் தூத†னீற்ற
விஜயனெடும் பாகதீர்த்தன் மருகோனே;
மதியணையுஞ் சோலையார்த்து
மதிவள‡சந் தானகோட்டின்
வழியருளின் பேறுகாட்டி யவிராலி-
மலைமருவும் பாதியேற்றி
|| கடிகமழ்சந் தானகோட்டில்
¶வழியருளின் பேறுகாட்டு பெருமாளே. (ரு)

323. ஐந்துபூதமு மாறுசமயமு
மந்த்ரவேதபு ராணகலைகளும்
ஐம்பதோர்வித மானலிபிகளும் வெகுரூப-
அண்டராதிச ராசரமுமுயர்
புண்டரீகனு மேகநிறவனும்
அந்திபோலுருவானுங்கிலவொடுவெயில்காலும்;

---

* காளிகாடு=இடும்பாவனம்.

† நீற்ற விஜயன்=பாசுபதாஸ்திரம் பெறும்பொருட்டு தேசமுழுதும் நீறுபூசிக்கொண்டு தவஞ்செய்த அருச்சுனன்.

‡ சந்தானகோட்டின் வழியருளின் பேறுகாட்டிய=சந்தானம் என்னும தெய்வவிருக்ஷம் தன்னை அடைந்தோர்க்கு அவர்கள் வேண்டிய பொருள்களை வேண்டியவாறு கொடுக்கும் என்பதை உலகத்தோர்க்குத் தெரிவித்த.

§ விராலிமலை மருவும் பாதிஏற்றி=விராலிமலைக்குப் பாதியளவு வரையில் அவர்களை ஏறச்செய்து.

|| கடிகமழ் சந்தானகோட்டில்=அவ்விடத்துற்ற தெய்வமணம் கமழ்கின்ற சந்தானகோடு என்னுமிடத்தில் எழுந்தருளியிருந்து கொண்டு.

¶ வழியருளின் பேறுகாட்டு=தம்மையடைந்த அன்பர்கட்கு இஷ்டகாமியங்களை ஈந்தருளிக்காட்டுகின்ற.

சந்த்ரசூரியர் தாமு*மசபையும்
விந்துநாதமு மேகவடிவம
தன்சொரூபம தாகவுறைவது சிவயோகம்-
தங்களாணவ மாயைகருமம
லங்கள்போயுப தேசகுருபர
சம்ப்ரதாயமொ டேயுநெறியது பெறுவேனோ;
வந்ததானவர் சேனைகெடிபுக
இந்த்ரலோகம்வி பூதர்குடிபுக
மண்டுபூதப சாசுபசிகெட மயிடாரி-
வன்கண்வீரிபி டாரிஅரஹர
சங்கராஎன மேருகிரிதலை
மண்டுதூளெழ வேலையுருவிய வயலூரா;
வெந்தநீறணி வேணியிருடிகள்
பந்தபாசவி காரபரவசு
வென்றியானசமாதிமுறுகுகல் முழைகூடும்-
விண்டுமேல்மயி லாடஇனியக
ஞண்டுகாரளி பாட†இதழிபொன்
விஞ்சவீசுவி ராலிமலையுறை பெருமாளே.(௪)

324. காதலமுங்குறி கொண்டகண்டமும்
விரவியெழுந்துசு ருண்டுவண்டடர்
கனவியகொண்டைகு லைந்தலைந்திட அதிபாரக்-
களபசுகந்தமி குந்தகொங்கைக
ளிளகமுயங்கிம யங்கியன்புசெய்
கனியிதழுண்டுது வண்டுபஞ்சணை மிசைவிழா;
இரதபருக்கியு றுங்கருங்கயல்
பொருதுசிவந்துகு விந்திடும்படி
யிதவியவுந்தியெ னுந்தடந்தனி லுறமூழ்கி-
இனியதொரின்பம்வி ளைந்தளைந்துபொய்
வனிதையர்தங்கள்ம ருங்கிணங்கிய
இளமைகிழம்படுமுன்பதம்பெறவுணர்வேனோ;

* அசபை என்பது ஹம்ஸமந்திரம். † இதழி=கொன்றை.

பாதசிலம்புபு லம்புமம்பத
வரிமுக*எண்கினு டன்குரங்கணி
பணிவிடைசென்றுமு யன்றகுன்றணி
யிடையேபோய்க்-

பகடியிலங்கைக லங்கஅம்பொனின்
மகுடசிரந்தச முந்துணிந்தெழு
படியுநடுங்கவி ழும்பனமபழ மென†வாகும்;

மருதமுதைந்துமு குந்தனன்புறு
மருககுவிந்தும லர்ந்தபங்கய
வயலியில்வம்பவிழ் சண்பகம்பெரி யவிராலி-

மலையில்விளங்கிய கந்தஎன்றனை
மகிழ்வொடு‡வந்திசெய் மைந்தனென்றனை
வழிவழியன்புசெய் தொண்டுகொண்டருள்
பெருமாளே. (௫)

325. கரிபுராரிகாமாரி திரிபுராரிதீயாடி
கயிலையாளிகாபாலி §கழையோனி-

கரவுதாசனாசாரி பரசுபாணிபாணி
கணமொடாடிகாயோகி சிவயோகி;

பரமயோகிமாயோகி பரியராசடாசூடி
பகவொணாதமாஞானி பசுவேறி-

பரதமாடிகானாடி பரவயோதிகாதீத
பரமஞானவூர் ‖பூத அருளாயோ;

¶சுருதியாடிதாதா**வி வெருவியோடமூதேவி
††துரககோபமீதோடி வடமேரு-

சுழலவேலைதீமூள அழுதளாவிவாய்பாறி
‡‡சுரதிஞேடுசூர்மாள வுலகேழும்;

---

*எண்கு=கரடி. †ஆகும்=ஆக்கும். ‡வந்திசெய்=வந்தனைசெய்.
§கழையோனி=மூங்கிலிற்பிறந்தவர். ‖ பூத=புகுத.
¶ சுருதியாடிதாதா=வேதாத்தியயனஞ்செய்யும் பிரமன்.
** வி=மிகவும். ††துரக=அலை.
‡‡ சுரதிஞேடு=சுரத்திஞேடு=சப்தத்தோடு.

*திகிரிமாதிராவார திகிரிசாபவேதாள
திரளினோடுபாரோடு கழுகாட-
செருவிலுடு†வானீப கருணைமேருவேபார
திருவிராலியூர்மேவு பெருமாளே. (௬)

326. ‡காமாத்திர மாகியிளைஞர்கள்
வாழ்நாட்கொடு போகியழகிய
காதாட்டிய பாரஇருகுழை யளவோடி-
கார்போற்றவழோதிநிழல்தனி
லார்வாட்கடை யிடுநனைகொடு
காலேற்றுவை வேலின்முனைகடை யமதூதர்;
ஏமாப்பற மோகவியல்செய்து
நீலோற்பல ஆசில்மலருட
னேராட்டவி னோதமிடும்விழி மடவார்பால்-
ஏகாப்பழி பூணுமருளற
நீதோற்றிமு னாளுமடிமையை
யீடேற்றுத லாலுன்வலிமையை மறவேனே;
சீமாட்டியு மாயதிரிபுரை
காலாக்கினி கோபபயிரவி
சிலோத்தமி நீலிசுரதிரி புவநேசை-
சீகார்த்திகை யாயஅறுவகை
மாதாக்கள்கு மாரனெனவெகு
சீராட்டொடு பேணவடதிசை கயிலாசக்;
கோமாற்குப தேசமுபநிட
வேதார்த்தமெய்ஞ் ஞானநெறியருள்
கோதாட்டிய ஸ்வாமியெனவரு மிளையோனே-
கோடாச்சிவ பூசைபவுருஷ
மாறுக்கொடை நாளுமருவிய
கோனாட்டுவி ராலிமலையுறை பெருமாளே. (எ)

---

* திகிரிமாதிர ஆவாரதிகிரி=வட்டமாகிய திக்குகளை மறைக்கின்ற சக்ரவாளகிரி. †வானீப=வான்நீப.

‡ காமாத்திரம்=காமஅஸ்திரம்=மன்மதபாணம்.

327. சீரான * கோலகால நவமணி
மா†லாபி ஷேகபார வெகுவித
தேவாதி தேவர்சேவை செயுமுக மலராறும்-
சீராடு வீரமாது மருவிய
ஈராறு தோளுநீளும் வரியளி
சீராக மோதுநீப பரிமள இருதாளும்;
ஆராத காதல்வேடர் மடமகள்
‡ஜீமூத மூர்வலாரி மடமகள்
ஆகாத பூதமாக வலமிட முறைவாழ்வும்-
ஆராயும் நீதிவேலு மயிலுமெய்
ஞானாபி ராம §தாபவடிவமும்
ஆபாத னேனுமநாளு நினைவது பெறவேணும்;
ஏராரு மாடகூட மதுரையில்
மீதேறி மாறியாடு மிறையவர்
|| ஏழேழு பேர்கள்கூற வருபொரு ளதிகாரம்-
ஈடாய ¶ஊமர்போல வணிகரி
லூடாடி யாலவாயில் விதிசெய்த
லீலாவி சாரதீர வரதர குருநாதா;
**கூராழி யால்முன் வீயபகலை பவ
னீடேறு மாறுபானு மறைவுசெய்
கோபால ராயனேய மருள்திரு மருகோனே-
கோடாம லாரவார அலையெறி
~~காவேரி யாறுபாயும் வயலியில்~~
கோனாடு சூழ்விராலிமலையுறை பெருமாளே (அ)

---

* கோலாகலம் என்பது 'கோலகாலம்' எனநிலைமாறியது. கோலாகலம=சம்பிரமம். † அபிஷேகம்=முடி.

‡ ஜீமூதம்=மேகம். § தாபம்=பிரதாபம்.

|| ஏழேழுபேர்கள்=சங்கப்புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர்.

¶ ஊமர்போலவணிகர்இல் = செட்டிவீட்டில் ஊமைபிள்ளை போல் தோன்றி.

** கூராழியால் பானுமறைவுசெய் எனக்கூட்டுக.

328. பாதாள மாதிலோகநிகிலமு
மாதார மானமேருவெனவளர்
பாடீர பாரமானமுலையினை விலைகூறிப்-

பாலோடு பாகுதேனெனினியசொ
லாலேய னேகமோகமிடுபவர்
பாதாதி கேசமாகவகைவகை கவிபாடும்;

வேதாள ஞானகீனன்விதரண
நாதாளி லாதபாவியகிஜவன்
வீணுள்ப டாதபோததவமிலி பசுபாச-

வ்யாபார முடன்யானுமுனதிரு
சீர்பாத தூளியாகிநரகிடை
வீழாமலேசுவாமிதிருவருள் புரிவாயே;

தூதாள ரோடுகாலன்வெருவிட
வேதாமு ராரியோடஅடிபணை
சோராவ லாரிசேனைபொடிபட மறைவேள்விச்-

சோமாசி மார்சிவாயநமவென
மாமாய வீரகோரமுடனிகல்
சூர்மாள வேலையேவும்வயலியி லினையோனே;

கூதாள நீபநாகமலர்மிசை
சாதாரி தேசிநாமக்ரியைமுதல்
கோலால நாதகீதமதுகர மடர்சோலை-

கூடாரல் தேருநாரைமருவிய
காஞறு பாயுமேரிவயல்பயில்
கோனாடு சூழ்விராலிமலையுறைபெருமாளே.(கூ)

329. பாலாசைகோப மோயாதெநாளு
மாயாவிகார வழியேசெல்-

மாபாவி*காளி தானேனும்நாத
மாதாபிதாவு மினிநீயே;

* காளி=விஷகுணமுள்ளவன.

நாலானவேத நூலாகமாதி
நாளேதினேனு மிலேயினே-
நாள்போய்விடாம லாறுமீதில்
ஞானோபதேச மருள்வாயே;
பாலா*கலார ஆமோதலேப
பாடீரவாக அணிமீதே-
பாதாளபூமி யாதாரமீன
†பானீயமேலே வயலூரா;
வேலாவிராலி வாழ்வேசமூக
வேதாளபூத பதிசேயே-
வீராகடோர சூராரியேசெ
வேளேசுரேசர் பெருமாளே.(கo)

330. இலாபமில்பொலாவுரை சொலாமனதபோதன
ரியாவரு மிராவுபக லடியேனை-
இராகமும்விநோதமு முலோபமுடன்மோகமு
மிலானிவ னுமாபுருஷ னெனவேய;
சலாபவமலாகர சசிதரவிதாரண
சதாசிவ மயேசுரச கலலோக-
சராசரவியாபக பராபரமநோலய
சமாதிய னுபூதிபெற நினைவாயே;
‡நிலாவிரிநிலாமதி §நிலாதவநிலாசன
‖நியாயப ரிபாலஅர நதிசூடி-
நிசாசரகுலாதிப திராவண ¶புயாரிட
நிராமய சரோருகர னருள்பாலா;

---

* கல்லாரம=செங்குவளை. †பானீயம்=ஜலம்.

‡ நிலாவிரி நிலாமதி=சந்திரிகைவிரித்து பிரகாசிக்கின்ற மதியையும்.

§ நில்லாத அநில அசன=நிற்காது அலைகின்ற காற்றைப் புசிக்கின்ற.

‖ நியாயபரிபால அர=நியாயபரிபாலனஞ் செய்வதில் வல்ல ஆதிசேஷனாகிய சர்ப்பத்தையும்.

¶ புயாரிட=புய அரிட=புயங்களுக்கு அரிட்டத்தை யுண்டாக்கிய. அரிட்டம்=கேடு.

* விலாசுகம்வலாரெனு முலாசவித †வாகவ
‡ வியாதர்கள் விஞேதமகள் மணவாளா-
விராவுவயலார்புரி சிராமலைபிரான்மலை
விராலிமலைமீதிலுறை பெருமாளே. (கக)

331. நிராமய புராதன பராபர வராம்ருத
நிராகுல சிராதிகப் ப்ரபையாகி-
நிராசசி வராஜத வராஜர்கள் பராவிய
நிராயுத புராரியச் சுதன்வேதா;
§ சுராலய தராதல சராசர பிராணிகள்
சொரூப ‖ மி வராதியைக் குறியாமே-
துராலபுகழ் பராதின கராவுள பராமுக
துரோகரை தராசையுற் றடைவேனே;
இராகவ இராமன் ¶ முன் இராவண **இராவண
இராவண இராஜனுட் குடன் ††மாய்வென்-
றிராகன்மல ராணிஜ புராணர்கு மராகலை
யிராஜசொ லவாரணர்க் கிளையோனே;
‡‡ விராகவ சுராதிப பொராதுத விராதடு
§§ விராயண பராயணச் ‖ ‖ செருவூரா-

* வில் ஆசுகம். ஆசுகம்=அம்பு. † ஆகவம்=போர்.

‡ வியாதர்கள்=வேடர்கள்.

§ சுராலயம்=தேவலோகம். ‖ இவர்தல்=கலத்தல்.

¶ முன் இராவண=(கைலாசகிரியை அசைத்தெடுத்துச் சிவபெருமானுல் அடர்க்கப்பட்ட) அந்நாளில் அழுகுரலோசையுற்ற.

** இராவண=இராவின்வண்ணமாகிய கருநிறத்தையுடைய.

†† மாயவென்ற இராகன் மலர் ஆள் நிஜபுராணர் = மாயும்படி வென்ற அன்பையுடையவராகிய விஷ்ணுவின் கண்ணையே மலராகக் கொண்டருளிய நிஜ புராணர்.

‡‡ விராகவன்=ஆசையில்லாதவன்.

§§ வீர அயண பராயணம்=வீரவழியில்விருப்பம்.

‖ ‖. செருவூர்=திருப்போரூர்;

விராவிய குராவகில் பராரைமு திராவளர்
விராலிமலைராஜதப் பெருமாளே. (கஉ)

332. மாயாசொரூப முழுச்சமத்திகள்
ஓயாவுபாய மனப்பசப்பிகள்
வாணாளையீரும் விழிக்கடைச்சிகள் முனிவோரும்-
மாலாகிவாட நகைத்துருக்கிகள்
* ஏகாசமீது தனத்திறப்பிகள்
வாரீரிரீரென் முழுப்புரட்டிகள் வெகுமோகம்;
ஆயாதவாசை யெழுப்புமெத்திகள்
ஈயாதபோதி லறப்பிணக்கிகள்
ஆவேசநீருண் மதப்பொறிச்சிகள் பழிபாவம்-
ஆமாறெணாத திருட்டுமட்டைகள்
கோமாளமான குறிக்கழுத்திகள்
ஆசாரவீன விலைத்தனத்திய ருறவாமோ;
காயாதபால்நெய் தயிர்க்குடத்தினை
ஏயாவெணாமலெடுத்திடைச்சிகள்
காணாதவாறு குடிக்குமப்பொழு தாலோடே-
கார்போலுமேனி தனைப்பிணித்தொரு
போர்போல்அசோதை பிடித்தடித்திட
காதோடுகாது கையிறபிடித்தழு தினிதூதும்;
வேயாலனேக விதப்பசுத்திரள்
சாயாமல்மீள அழைக்குமச்சுதன்
வீறானமாமனைப்படைத்தருள வயலூரா-
வீணாள்கொடாத படைச்செருக்கினில
சூர்மாள †வேலை விடுக்கும்அற்புத
வேலாவிராலிமலைத்தலத்துறை பெருமாளே. ()

333. மேகமெனுங்குழல்சாய்த்திரு
கோகனகங்கொடுகோத்தணை
மேல்விழுகின்றபராக்கினி லுடைசோர-

* ஏகாசம்=மேல்போர்வை. † வேலை=கடலில்.

மேகலையுந்தனிபோய்த்தனி
யேகரணங்களுமாய்க்கயல்
வேல்விழியுங்குவியாக்குரல் மயில்காடை;
கோகிலமென்றெழுபோய்க்கனி
வாயமுதுண்டுருகாக்களி
கூரவுடன்பிரியாக்கல வியின்மூழ்கிக்-
கூடிமுயங்கிவிடாய்த்திரு
பாரதனங்களின்மேற்றுயில்
கூரினுமம்புயதாட்டுணை மறவேனே;
மோகரதுந்துமிபார்ப்பவி
ராவிவிலங்கலின்வீட்டதில்
மூவுலகுந்தொழுதேத்திட வுறைவோனே-
மூதிசைமுன்பொருகாற்றட
மேருவையம்பினிலவீழ்த்திய
மோகன*சங்கரிவாழ்த்திட மதியாமல்;
ஆகமடிந்திடவேற்கொடு
சூரனைவென்றடல்போய்த்தணி
யாமையின்வென்றவனூற்பிற கிடுதேவர்-
ஆதியிளந்தலைமாத்தா
சாளஅவன்சிறைமீட்டவ
னுலகங்குடியேற்றிய பெருமாளே. (கச)

331. மோதியிறுகிவட மேருவெனவளரு
மோகமுலையசைய வந்துகாயம்-
மோசமிடுமவர்கள் மாயைதனில்முழுகி
மூடமெனஅறிவு கொண்டதாலே;
காதிவருமியம தூதர்கயிறுகொடு
காலிலிறுகளனை வந்திழாதே-
காவலெனவிரைய வோடியுனதடிமை
காணவருவதினி யெந்தநாளோ;

*சங்கரி=சங்கையுடையஅரி

ஆதிமறையவனு மாலுமுயர்சுடலை
யாமெரனுமிவ ரொன்றதான-
ஆயியமலைதிரி சூலிகுமரிமக
மாயிகௌரியுமை தந்தவாழ்வே;
சோதிநிலவுகதிர் வீசுமதியின்மிசை
தோயவளர்கிரியி னுந்திநீடு-
சோலைசெறிவுளவி ராலிநகரில்வளர்
தோகைமயிலுலவு தம்பிரானே. (௧௫)

விநாயகமலை.

335. சரவணசாதாநமோநம கருணையதீதாநமோநம
சததளபாதாநமோநம அபிராம-
தருணகதீராநமோநம நிருபமர்வீராநமோநம
சமதளவூராநமோநம சகதீச;
பரமசொரூபாநமோநம சுரர்பதிபூபாநமோநம
பரிமளநீபாநமோநம உமைகாளி-
பகவதிபாலாநமோநம இகபரமூலாநமோநம
பவுருஷசீலாநமோநம அருள்தாராய்;
இரவியுமாகாசபூமியும் விரவியதூளேறவானவ
ரெவர்களுமீடேறஏழ்கடல் முறையோவென்-
றிடர்படமாமேருபூதர மிடிபடவேதானிசாசர
ரிகல்கெடமாவேகநீடயில் விடுவோனே;
மரகதஆகாரஆயனு மிரணியஆகாரவேதனும்
*வசுவெனுமாகாரஈசனு மடிபேண-
மயிலுறைவாழ்வேவிநாயக மலையுறைவேலாமகீதர
வனசரராதாரமாகிய பெருமாளே.

திருச்செங்கோடு

336. அன்பாகவந்து வுன்றாள்பணிந்து
ஐம்பூதமொன்ற நினையாமல்-

* வசு=அக்கினி

அன்பால்மிகுந்து நஞ்சாருகண்க
ளம்போருகங்கள் முலைதானும்;
கொந்தேமிகுந்து வண்டாடிநின்று
கொண்டாடுகின்ற குழலாரைக்-
கொண்டேநினைந்து மன்பேதுமண்டி
குன்று *மலைந்து அலைவேனோ;
மன்றாடிதந்த மைந்தாமிகுந்த
வம்பார்கடம்பை யணிவோனே-
வந்தேபணிந்து நின்றார்பவங்கள்
வம்பே † தொலைந்த வடிவேலா;
சென்றேயிடங்கள் கந்தா ‡எனும்பொ
செஞ்சேவல்கொண்டு வரவேணும்-
செஞ்சாலிகஞ்ச மொன்றாய்வளர்ந்த
செங்கோடமர்ந்த பெருமாளே. (க)

337. பந்தாடியங்கை நொந்தார்பரிந்து
பைந்தார்புனைந்த குழலமீதே-
பண்பார்சுரும்பு பண்பாடுகின்ற
பங்கேருகங்கொள் முகமீதே;
மந்தாரமன்றல் சந்தாரமொன்றி
வன்பாதகஞ்செய் தனமீதே-
மண்டாசைகொண்டு விண்டாவிநைந்து
மங்காமலுன்ற னருள்தாராய்;
கந்தாஅரன்றன் மைந்தாவிளங்கு
கன்றாமுகுந்தன் மருகோனே-
§கன்றா ‖ விலங்க லொன்றாறுகண்ட
கண்டாஅரம்பை மணவாளா;
செந்தாதடர்ந்த கொந்தார்கடம்பு
திண்டோள்நிரம்ப அணிவோனே-

* மலைதல்=ஒருவழிப்படாதுநிற்றல். † தொலைந்த=தொலைத்த.
‡ எனும்பொ=எனும்போது. § கன்றா=கோபித்து.
‖ விலங்கல்ஒன்று ஆறுகண்ட=ஓர்மலையைவழிகண்ட.

திண் *கோடரங்க †ளெண்கோடுறங்கு
செங்கோடமர்ந்த பெருமாளே. (உ)

338. வண்டார்மதங்க ளுண்டேமயங்கி
வந்தூரு ‡கொணட லதனேடும்-
வண்காமனம்பு தன்கால்மடங்க
வன்போர்மலேந்த விழிவேலும்;
கொண்டேவளைந்து கண்டார்தியங்க
நின்ருர்குரும்பை முலேமேவி-
கொந்தாரரும்பு நின்தாள்மறந்து
குன்ருமலுன்ற னருள்தாராய்;
பண்டாழிரங்கு கொண்டாழிதங்கு
பண்போலுகந்த மருகோனே-
பண்சாரணைந்து நண்போதுமன்பர்
பங்காகிநின்ற குமரேசா;
செண்டாடியண்டர் கொண்டாடமன்றில்
நின்ருடிசிந்தை மகிழ்வாழ்வே-
செஞ்சாலிமிஞ்சி மஞ்சாடுகின்ற
செங்கோடமர்ந்த பெருமாளே. (௩)

339. கரையறவுருகுதல் தருகயல்விழியினர்
கண்டானசெஞ்சொல் மடமாதர்-
கலவியில்முழுகிய நெறியினிலறிவுக
லங்காமயங்கும் விணேயேனும்;
உரையையுமறிவையும் உயிரையுமுணர்வையும்
உன்பாதகஞ்ச மலர்மீதே-
உரவொடுபுனேதர நினேதருமடியரொ
டொன்ருகஎன்று பெறுவேனே;
வரையிருதுணிபட வளேபடுசூரர்குடி
வந்தேறஇந்த்ர புரிவாழ-

* கோடரங்கள் = குரங்குகள், † எண்கு = கரடி.
‡ கொண்டல் = மேகம்போன்றகுழல்.

மதவிதகஜரத துரகதபததியின்
வன்சேனைமங்க முதுமீன;
திரைமலிசலதி முறையிடநிசிசரர்
திண்டாடவென்ற கதிர்வேலா-
ஜெகதலமிடிகெட விளைவனவயலணி
செங்கோடமர்ந்த பெருமாளே. (௪)

340. சாலநெடுநாள்மடந்தை காயமதிலேயலைந்து
சாமளவதாகவந்து புவிமீதே-
சாதகமுமானபின்பு சீறியழுதேகிடந்து
தாரணியிலேதவழ்ந்து விளையாடி;
பாலனெனவேமொழிந்து பாகுமொழிமாதர்தங்கள்
பாரதனமீதணைந்து பொருள்தேடி-
பார்மிசையிலேயுழன்று பாழ்நரகெய்தாமலொன்று
பாதமலர்சேரஅன்பு தருவாயே;
ஆலமமுதாகவுண்ட ஆறுசடைநாதர்திங்கள்
ஆடரவுபூணர்தந்த முருகோனே-
ஆனைமடுவாயிலன்று மூலமெனவோலமென்ற
ஆதிமுதல்நாரணன்றன் மருகோனே;
கோலமலர்வாவியெங்கு மேவுபுனம்வாழ்மடந்தை
கோவையமுதூறலுண்ட குமரேசா-
கூடிவருசூரடங்க மாளவடிவேலெறிந்த
கோடைநகர்வாழவந்த பெருமாளே. (௫)

341. நீலமஞ்சானகுழல் மாலைவண்டோடுகதி
நீடுபந்தாடுவிழி யார்பளிங்கானநகை
நீலபொன்சாபநுத லாசையின்தோடசையு
நீள்முகந்தாமரையி னார்மொழிந்தாரமொழி
நேர்சுகம்போலகமு கானகந்தாரர்புய
*நேர் †சுணங் ‡காவி §கிளை யேர்சிறந்தார்மலையி
ரண்டுபோல-

---

* நேர்=நேர்ந்த. † சுணங்கு=தேமல்.
‡ ஆவி=வாசனை. § கிளை=மூங்கில்.

நீளிபங்கோடிளகிர் தேனிருந்தாரமுலே
நீடலங்காரசர மோடடைந்தார்மருவி
நீள்மணஞ் * சாறுபொழி யாவளம்போதிவையி
† னீலவண்டேவியகல் காம ‡ னங்காரநிறை
நேசசந்தான அல்குல் காமபண்டாரமுதை
நேருசம்போகரிடை நூலொளிர்ங் § தாசையுயிர்
சம்பையா || ரம்;

சாலு ¶ பொன்தோகையமை பாளிதஞ்சூழ்சரண
தாள்சிலம்போலமிட வேகடந்தானநடை
சாதிசந்தானெனின மார்யரந்தோகையென
தானெழுங்கோலவிலே மாதரின்பார்கலவி
தாவுகொண்டேகலிய நோய்கள்கொண்டேபிறவி
தானடைந்தாழுமடி யேனிடஞ்சாலும்வினே
யஞ்சியோடத்;

தார்கடம்பாடுகழல் பாதசெந்தாமரைகள்
தாழ்பெரும்பாதைவழி யேபடிந்தேவருகு
தாபம்விண்டேயமுத வாரியுண்டேபசிகள்
தாபமுந்தீரதுகிர் போல்கிறங்காழ்கொளுரு
சாரவுஞ்சோதிமுரு காவெனுங்காதல்கொடு
தானிருந்தோத **இரு ††வோரகம்பேறுறுக
விஞ்சைதாராய்;

---

* சாறுபொழி அ வள்ளம் எனப்பிரிக்க, வள்ளம்=கிண்ணம்.

† நீலவண்டு=நீலோற்பலக்கணே.

‡ அங்காரம்=ஆங்காரம், இறுமாப்பு.

§ ஆசை உயிர்சம்பையார் = திக்குகளில்வாய் விட்டு மின்னும் மின்னல்போன்ற இடையையுடையவர்கள்.

|| அம்சாலு=அழகுநிறைந்த.

¶ பொன்தோகை அமைபாளிதம்=பொன் சரிகையிட்ட முன்தாணேயமைந்த பட்டுப்புடைவை.

** இரு=பெருமைபொருந்திய. †† ஓர்=ஒப்பற்ற.

சூலியெந்தாய்கவுரி மோகசங்காரிகுழை
தோடுகொண்டாடுசிவ காமசுந்தரிகல
* தூளணிந்தாளிதிரு வாணியங்காளி †கலை
தோகைசெந்தாமரையின் மாதுநின்றேதுதிசெய்
தூயஅம்பாகமழைகொள் தோளிபங்காளக்ருபை
தோய்பரன்சேயெனவு மேபெரும்பார்புகழும்
விந்தையோனே.

சூரசங்காரசுரர் லோகபங்காஅறுவர்
தோகைமைந்தாகுமர வேள்கடம்பாரதொடை
தோளகண்டா ‡ பரம தேசிகந்தாஅமரர்
தோகைபங்காஎனவெ தாகமஞ்சூழ்சுருதி
தோதகம்பாடமலை யேழுதுண்டாயெழுவர்
சோரிகொண்டாறுவர வேலெறிந்தேநடன
முங்கொள்வேலா.

மாலியன்பாறவொரு ஆடகன்சாகமிகு
வாலியும் §பாழிமர மோடுகும்பாகனனு
மாழியுங்கோரவலி ராவணன்பாறவிடு
மாசுகன்கோலமுகி லோனுகந்தோதிடையர்
மாதுடன்கூடிவிளை யாடுசம்போகதிரு
மார்பகன் ‖ காணமுடி யோனணங்கானமதி
பொன்றுமானே.

மார்புடன்கோடுதன பாரமுஞ்சேரஇடை
வார்துவண்டாடமுக மோடுகந்தீரரச
வாயிதங்கோதிமணி நூபுரம்பாடமண
வாசைகொண்டாடுமயி லாளிதுங்காகுறவி
மாதுபங்காமறைகு லாவுசெங்கோடைநகர்
வாழவந்தாய்கரிய மாலயன்தேவர்புகழ்
தம்பிரானே. (சு)

---

* தூள்=விபூதி. † கலைதோகை=சரஸ்வதி.
‡ பரமதேசிக அந்தா எனப்பிரிக்க. § பாழி=பருத்த, வலிய.
‖ காணமுடியோன்=பொன்முடியோனாகிய விஷ்ணு.

342. வாசித்தநூல்மதங்கள் பேசிக்கொடாதவிந்து
வாய்மைப்பிரகாசமென்று நிலையாக-
மாசிக்கபாலமன்றில் நாசிக்குளோடுகின்ற
வாயுப்பிராணனென்று மடைமாறி;
*யோசித்தயாருடம்பை நேசித்துருதலைந்து
ரோமத்துவாரமெங்கு முயிர்போக-
யோகச்சமாதிகொண்டு மோகப்பசாசுமண்டு
லோகத்தில்மாய்வதென்றும் ஒழியாதோ;
வீசப்பயோதிதுஞ்ச வேதக்குலாலனஞ்ச
மேலிட்டசூர்தடிந்த கதிர்வேலா-
வீரப்ப்ரதாபபஞ்ச பாணத்தினால்மயங்கி
வேடிச்சிகாலிலன்று விழுவோனே;
கூசிப்புகாவொதுங்க †மாமற்றிகாதரிந்த
‡கூளப்புராரிதந்த சிறியோனே-
கோழிப்பதாகைகொண்ட கோலக்குமாரகண்ட
கோடைக்குள்வாழவந்த பெருமாளே. (௭)

343. கலக்குங்கோதற வடிக்குஞ்சிரிய
கருப்பஞ்சாறெனு மொழியாலே-
கருத்தும்பார்வையு முருக்கும்பாவிகள்
கடைக்கண்பார்வையி லழியாதே;
விலக்கும்போதக மெனக்கென்றேபெற
விருப்பஞ்சாலவு முடையேனென்-
வினைக்கொண்டேமன நினைக்குந்தீமையை
விடற்கஞ்சேலென அருள்வாயே;
அலைக்குந்தானவர் குலத்தின்சேனையை
அறுக்குங்கூரிய வடிவேலா-

---

* யோசித்த=கூட்டி.

† மாமன்றிகாதுஅரிந்த = மாமனாகியதக்கனை தடைபடாது தலையரிந்த. ‡ கூளப்புரம்=எளியதிரிபுரம்.

அடற்காலனுக்குக் *கடைக்கால்மிதித்திட்
டறப்பேதகப்பட் டழியாதே;
†கருக்காரர்நட்பைப் பெருக்காசரித்துக்
கலிச்சாகரத்திற் பிறவாதே-
கருத்தாலெனக்குத் திருத்தாளளித்துக்
கலைப்போதகத்தைப் புகல்வாயே;
ஒருக்கால்நினைத்திட் ‡டிருக்கால்மிகுத்திட்
டுரைப்பார்கள்சித்தத் துறைவோனே-
உரத்தோளிடத்திற் குறத்தேனைவைத்திட்
டொளித்தோடுமெற்றிக் குமரேசா;
செருக்காதருக்கிச் §சுரர்ச்சூர்நெருக்கச்
செருச்சூர்மரிக்கப் பொரும்வேலா-
திறற்பூதலத்திற் றிரட்சோணவெற்பிற்
றிருக்கோபுரத்திற் பெருமாளே. (௨௮)

491. அருமாமதனைப் பிரியாதசரக்
கயலார்நயனக் கொடியார்தம்-
அழகார்புளகப் புழுகார்சயிலத்
தணையாவலிகெட் டுடல்தாழ;
இருமாநடையுங் குறைபோயுணர்வற்
றிளையாவுளமுக் குயிர்சோர-
எரிவாய்நரகிற் புகுதாநபயக்
கிருபாதமெனக் கருள்வாயே;
ஒருமால்வரையைச் சிறுதூள்படவிட்
டுரமோடெறிபொற் கதிர்வேலா-
உறைமானடவிக் குறமாமகளுக்
குருகாதிருபொற் புயவீரா;

---

* கடைக்கால மிதித்திட்டு=அடிபட்டடைபோலி.

† கருக்காரர்=பிறவிக்கேதுவாகும் செய்கையோர்.

‡ இருக்கால்=இரண்டு திருவடிகளையும்.

§ சுரர்ச்சூர் நெருக்கு=சுரர்களாகிய தெய்வத்தன்மையோரை ஒடுக்கிய.

திருமால்கமலப் பிரமாவிழியிற்
றெரியாஅரனுக் கரியோனே-
செழுநீர்வயல்சுற் றருணபுரியிற்
றிருவீதியினிற் பெருமாளே. (உ௯)

492. அழுதுமாவாவெனத் தொழுதுமூடேடெநக்
கவசமாயாதரக் கடலூடுற்-
றமைவில்கோலாகலச் சமயமாபாதகர்க்
கறியொணாமோனமுத் திரைநாடிப்;
பிழைபடாஞானமெய்ப் பொருள்பெறாதேவினைப்
பெரியஆதேசபுற் புதமாய-
பிறவிவாராகரச் சுழியிலேபோய்விழப்
பெறுவதோநானினிப் புகல்வாயே;
பழையபாகீரதிப் படுகைமேல்வாழ்வெனப்
படியுமாறுயினத் தனசாரம்-
பருகுமாறனனச் சிறுவசோணாசலப்
பரமமாயூரவித் தகவேளே;
பொழுதுசூழ்போதுவெற் பிடிபடாபார்முதற்
பொடிபடாவோடமுத் தெறிமீனப்-
புணரிகோகோவெனச் சுருதிகோகோவெனப்
பொருதவேலாயுதப் பெருமாளே. (௩௰)

493. ஆனைவரிக்கோடிளநீர்ப் பாரமுலைச்சாரசைபட்
டாடைமறைத்தாடுமலர்க் குழலார்கள்-
ஆரவடத்தோடலையப் பேசிநகைத்தாசைபொருட்
டாரையுமெத்தாகமயக் கிடுமோகர்;
சோனைமழைப்பாரவிழித் தோகைமயிற்சாதியர்கைத்
தூதுவிடுத்தேபொருளைப் பறிமாதர்-
தோதகமுற்றேழ்நரகிற் சேருமழுக்காயனையுட்
சோதியொளிப்பாதமளித் தருள்வாயே;

தானதனத்திதிமிலைப் பேரிகைகொட்டாசமலைச்
சாயகடறகூரைவதைத் திடுவோனே -
தாளவியற்சோதிநிறக் காவினெழுக்கோலியெடுத்
தாபரம்வைத்தாடுபவர்க் கொருசேயே;
தேனிரசக்கோவையிதழ்ப் பூவைகுறப்பாவைதனத்
தேயுருகிச்சேருமணிக் கதிர்வேலா -
சீரருணைக்கோபுரமுற் றுணபுனத்தோகையுமெய்த்
தேவமகட்கோரருணைப் பெருமாளே. (௯௧)

494. இடருக்கிடாகிய கொடுமைக்கணைமேல்வரு
மிறுதிச்சிறுகால்வரு மதனாலே -
இயலைத்தருகானக *முயலைத்தருமேனியி
லெரியைத்தருமாமதி நிலவாலே;
தொடரக்கொடுவாதையி லடையக்கரைமேலலை
தொலையத்தனிவீசிய கடலாலே -
துணைபற்றணிபூமல ரணையிற்றனியேனுயிர்
துவளத்தருமோதுயர் தொலையாதோ;
வடபொற்றலமேருவின் முடுகிப்பொருசூரனை
மடியச்சுடவேவிய வடிவேலா -
மறவக்குலமாமொரு குறமெய்த்திருமாமகள்
மகிழப்புனமேவிய மயில்வீரா;
அடரப்படர்கேதகை மடலிற்றழைசேர்வய
லருணைத்திருவீதியி லுறைவோனே -
அவனித்திருமாதொடு சிவனுக்கிமையாவிழி
அமரர்க்கரசாகிய பெருமாளே. (௯௨)

495. இமராஜனிலாவதெறிக்குங் கனலாலே -
இளவாடையுமூருமொறுக்கும் படியாலே;
சமராகியமாரனெடுக்குங் கணையாலே -
தனிமானுயிர்சோருமதற்கொன் றருள்வாயே;

---

* முயலைத்தருமேனி=முயற் களங்கத்தைக் காட்டும் வடிவம்.

குமராமுருகாசடிலத்தன் குருநாதா-
குறமாமகளாசைதணிக்குந் திருமார்பா;
அமராவதிவாழ்வமரர்க்கன் றருள்வோனே-
அருணைபுரிவீதியினிற்கும் பெருமாளே. (௩௩)

496. இரதசுரதமுலை களுமார்புகுத்த நுதல்வேர்வரும்ப
அமுதநிலையில்விர லுகிரேகைதைக்க மணிபோல்விளங்க
இசலிசலியுப ரிதலீலையுற்று இடைநூல்நுடங்க
வுளமகிழ்ச்சியினோடே-
இருவருடலுமொரு வுருவாய்நயக்க முகமேலழுந்த
அளகமவிழவிழி களுமேகலிக்க நயனூரவிந்த
லகரிபெருகஅத ரமுமேயருந்தி முறையேயருந்த
உரையெழுப்பரிவாலே;
புருவநிமிரஇரு *கணைவாள்நிமைக்க வுபசாரமிஞ்ச
அவசகவசமள வியலேந்ரிக்க அதிலேயனந்த
புதுமைவிளையஅது பரமாபரிக்க இணைதோளுமொன்றி
அதிசுகக்கலையாலே-
டளகமுதிரவிர கமென்வாரிதத்த வனைநாண்மழுங்க
மனமுமனமுமுரு கியெயாதரிக்க வுயிர்போலுகந்து
பொருளதளவுமரு வுறுமாயவித்தை விலைமாதர்சிங்கி
விடஅருட்புரிவாயே,
டரவுமகரமுக ரமுமேவலுற்ற சகரால்விளைந்த
தமரதிமிரபிர பலமோகரத்ந சலராசிகொண்ட
படியைமுழுதுமொரு நொடியேமதித்து வலமாகவந்து
சிவனிடத்தமர்சேயே-
பழநிமிசையிலிசை யிசையேரகத்தில் திருவாவினன்கு
டியினில்பிரமபுர மதில்வாழ்திருந்த ணிகையூடுமெண்டர்
பதியுமுதியகதி யதுநாயெனுக்கு முறவாகிநின்று
கவிதையைப்புனைவோனே;
அரியுமயனுமம ருமாயசிட்ட பரிபாலனன்ப
ரடையுமிடரைமுடு கியெனுறதுட்ட கொலைகாரரென்ற
அசுரர்படையையடை யவும்வேரறுத்த அபிராமசெந்தி
லுரகவெம்படையோனே-

*வாள் என்பது கணவாள் என்றாயிற்று.

அருணகிரணகருணையபூரணச்ச ரணமேலெழுந்த
இரணகரணமுரா னுறுசூரனுட்க மயிலேறுகந்த
அருணையிறையவர்பெ ரியகோபுரத்தில் வடபாலமர்ந்த
அறுமுகப்பெருமாளே. (௩௪)

497. இரவுபகற் பலகாலும்-
இயலிசைமுத் தமிழ்கூறித்;
திரமதனைத் தெளிவாகத்-
திருவருளைத் தருவாயே;
பரகருணைப் பெருவாழ்வே-
பரசிவதத் துவஞானா;
அரனருள்சற் புதல்வோனே-
அருணகிரிப் பெருமாளே. (௩௫)

498. இருவர்மயலோ அமளிவிதமோ
என்னசெயலோ அணுகாத-
இருடிஅயன்மா லமரரடியா
ரிரையுமொலிதா னிவைகேளா;
தொருவனடியே னலறுமொழிதா
னொருவாபரிவாய் மொழிவாரோ-
உனதுபததூள் புவனகிரிதா
னுனதுகிருபா கரமேதோ;
பரமகுருவா யணுவிலசைவாய்
பவனமுதலா கியபூத-
படையுமுடையாய் சகலவடிவாய்
பழையவடிவா கியவேலா;
அரியுமயனோ டபயமெனவே
அயிலையிருள்மேல் விடுவோனே-
அடிமைகொடுநோய் பொடிகள்படவே
அருணகிரிவாழ் பெருமாளே. (௩௬)

499. இருவினையஞ்ச மலவகைமங்க
இருள்பிணிமங்க மயிலேறி-
இனவருளன்பு மொழியகடம்பு
வினதகமுங்கொ டளிபாட;

கரிமுகனெம்பி முருகனெனண்டர்
கனிமலர்சிந்த அடியேன்முன்-
கருணைபொழிந்து முகமுமலர்ந்து
கடுகிநடங்கொ டருள்வாயே;
திரிபுரமங்க மதனுடல்மங்க
திகழ்நகைகொண்ட விடையேறி-
சிவம்வெளியங்க ணருள்குடிகொண்டு
திகழநடஞ்செய் தெமையீணு;
அரசியிடங்கொள் மழுவுடையெந்தை
அமலன்மகிழ்ந்த குருநாதா-
அருணைவிலங்கல் மகிழ்குறமங்கை
அமளிநலங்கொள் பெருமாளே. (௩௭)

500. இருவினையூண்பசும்பை கருவிளைகூன்குடம்பை
யிடரடைபாழ்ம்பொதும்ப ரிதவாரி-
இடைதிரிசோங்குகந்த மதுவதுதேங்குகும்ப
மிரவிடைதூங்குகின்ற பிணிசோவுக்;
குருவியல்பாண்டமஞ்சு மருவியகூண்டுநெஞ்சொ
டுயிர்குடிபோங்குரம்பை யழியாதென்-
றுலகுடனேன்றுகொண்ட கருமபிராந்தொழிந்து
னுபயபதாம்புயங்க ளடைவேனோ;
அருணையிலோங்குதுங்க சிகரகராம்புயங்கள்
அமரர்குழாங்குவிந்து தொழவாழும்-
அடியவர்பாங்கபண்டு புகலகிலாண்டமுண்ட
அபினவசார்ங்ககண்டன் மருகோனே;
கருணைமருகேந்த்ரஅன்ப ருடனுரகேந்த்ரர்கண்ட
கடவுள்நடேந்த்ரர்மைந்த வரைசாடும்-
கலபககேந்த்ரதந்த்ர அரசநிசேந்த்ரகந்த
கரகுலிசேந்த்ரர்தங்கள் பெருமாளே. (௩௮)

501. இருளளகமவிழமதி போதமுத்தரும்ப
இலகுகயல்புரளஇரு பாரபொற்றனங்கள்
இளகஇடைதுவளவளை பூசலிட்டிரங்க
எவராலும்-
எழுகரியகலைநெகிழ ஆசைமெத்தவுந்தி
யினியசுழிமடுவினிடை மூழ்கிநட்பொடந்த
இதழமுதுபருகிஉயிர் தேகமொத்திருந்து
முனிவாறி;
முருகுகமழ்மலரமளி மீதினிற்புகுந்து
முகவனசமலர்குவிய மோகமுற்றழிந்து
மொழிபதறவசமழிய ஆசையிற்கவிழ்ந்து
விடுபோதும்-
முழுதுணரவுடையமுது மாதவத்துயர்ந்த
பழுதில்மறைபயிலுவன ஞாதரித்துநின்று
முனிவர்சுரர்தொழுதருகு பாதபத்மமென்று
மறவேனே;
ஒருசிறுவன்மணமதுசெய் போதிலெய்த்துவந்து
கிழவடிவுகொடுமுடுகி வாசலிற்புகுந்து
உலகறியஇவனடிமை யாமெனக்கொணர்ந்து
சபையூடே-
ஒருபழையசருகுமடி ஆவணத்தையன்று
உரமொடவனதுவலிய வேகிழிக்கநின்று
உதறிமுறையிடுபழைய வேதவித்தர்தந்த
சிறியோனே;
அரியவுடுபதிகடவி யாடசச்சிலம்பொ
டழகுவடமணிமுடிவி யாளமிட்டணிந்த
அமரரொடுபலாமுடுகி ஆழியைக்கடைந்து
அமுதாக-
அருளுமரிதிருமருக *வாரணத்தையன்று
அறிவினுடனொருகொடியி லேதரித்துகந்த
அருணகிரிநகரிலெழு கோபுரத்தமர்ந்த
பெருமாளே. (௩௯)

*வாரணம்=கோழி.

502. இறுகுமணிமுலை மருவுதாளமு
மெரியுமுமிழ்மதி நிலவாலே-
*இரவியெனதுயிர் கவரவருகுழ
லிசையிலுறுகட லலையாலே;
தறுகண்ரதிபதி மதனன்விடுகொடு
சரமிலெளியெனு மழியாதே-
தருணமணிபொழி லருணைநகருறை
சயிலமிசையினில வரவேணும்;
முறுகுதிரிபுர மறுகுகனலெழ
முறுவலுடையவர் குருநாதா-
முடியகொடுமுடி யசுரர்பொடிபட
முடுகுமரகத மயில்வீரா;
குறவர்மடமகள் அமுர்தகனதன
குவடுபடுமொரு திருமார்பா-
கொடியசுடரிலை தனையுபெழுகடல்
குறுகவிடவல பெருமாளே. (௬௰)

503. உலையிலனலொத்த வுடலினனல்பற்றி
யுடுபதியைமுட்டி யமுதூற-
லுருகிவரவிட்ட பரமசுகமுற்று
வுனதடியைநத்தி நினையாமல்;
சிலைநுதலிலிட்ட திலதமவிர்பொட்டு
திகழ்முகவர்முத்து நகையாலே-
சிலுகுவலையிட்ட மயல்கவலைபட்டு
திருடனெனவெட்கி யலைவேனோ;
கலைகனகவட்ட திமிலைபறைகொட்ட
கனகமயில்விட்ட கதிர்வேலா-
கருதலரின்முட்டி கருகிவருதுட்ட
கதவமணருற்ற குலகாலா;

---

*இரவி=இராவி, வருந்தி.

அலைகடலுடுத்த தலமதனில்வெற்றி
அருணைவளர்வெற்பி லுறைவோனே;
அசுரர்களைவெட்டி யமரர்சிறைவிட்டு
அரசுநிலையிட்ட பெருமாளே. (௪௧)

504. கடல்பரவுதரங்கமீதெழு திங்களாலே-
கருதிமிகமடந்தைமார்சொல்வ தந்தியாலே;
வடவனலைமுனிந்துவீசிய தென்றலாலே-
வயலருணையில்வஞ்சிபோதந லங்கலாமோ;
இடமுமையையமணந்தநாதரி றைஞ்சும்வீரா-
எழுகிரிகள்பிளந்துவீழவ திரதவேலா;
அடலசுரர்கலங்கியோடமு னிந்தகோவே-
அரிபிரமபுரந்தராதியர் தம்பிரானே. (௪௨)

505. கமலமுகப் பிறைநுதல்பொற்
சிலையெனவச் சிரகணைநற்
கயலெனபொற சுழலுமவிழிக் குழல்கார்போல்-
கதிர்தரளொப் பியதசனக்
கமுகுகளப் புயகழைபொற்
கரகமலத் துகிர்விரலிற கிளிசேரும்;
குமரிதனத் திதலைமலைக்
கிசலியிணைக் கலசமெனக்
குவிமுலைசற் றசையமணிக் கலனுடைக்-
கொடியிடைபட் டுடைநடைபொற்
சரணமயிற் கொமனமெனக்
குனகிபொருட் பறிபவருக் குறவாமோ;
திமிலையுடுக் குடன்முரசுப்
பறைதிமிதித் திமிதிமெனட்
டிமிடிமிடிட் டிகுதிமிதித் தொலிதாளம்-
ரசெக் கணகதறத்
திடுதிடெனக் கொடுமுடியெட
டிகைசிலைபட் டுவரிபடச் சிலை*கோடி;

*கோடி=கோட்டி, வளைத்து,

துமிலவுடற் றசுரர்முடிப்
பொடிபடாத் தழுள்பெருநத்
தொகுதசைதொட் டலகையுணத்
தொடும்வேலா-
துவனிதினைப் புனமருவிக்
குறமகளைக் களவுமயற்
சுகமொடணைத் தருணகிரிப் பெருமாளே.(௫௩)

506. கமலமொட்டைக் கட்டழித்துக்குமிழியை
நிலைகுலைத்துப் பொற்குடத்தைத்தமனிய
கலசவர்க்கத் தைதத்தகர்த்துக்குலையற இளநீரைக்-
கறுவிவட்டைப் பிற்றரத்திப்பொருதப
சயம்விளைத்துச் செபபடித்துக்குலவிய
கரிமருப்பைப் புக்கொடித்துத்திறல்மக
*ணபிஷேகப;
அமலைநெற்றிக் கட்டழற்குட்பொடிசெய்து
அதிகசக்ரப் புட்பறக்கக்கொடுமைபி
னடலபடைத்தச் சப்படுத்திச்சபதமொ
டிருதாளம்-
அறைதல்கற்பித் துப்பொருப்பைப்பரவிய
சிறகறுப்பித் துக்கதித்துப்புடைபடு
மபிநவச்சித் ரத்னத்துத்திருடிக ளுழுவாமோ;
தமரமிக்குத் திக்கதிர்க்கப்பலபறை
தொகுதொகுக்குத் தொத்தொகுகுத்தொகுதொகு
தரிகிடத்தத் தத்தரிக்கத்தரிகிட எனவோதி-
†சவடுறப்பக் கப்பமொத்திப்புகையெழ
விழிகளுட்செக் கச்சிவத்துக்குறளிகள்
தசைகள்பட்சித் துக்‡களித்துக்கழுதொடு
கழுகாட;

*அபிஷேகம்=கிரீடம். †சவடு உற பக்க பழு ஒத்தி=பக்கத்துப் பழுவெலும்புகள் நெரிய முடக்கிய கைகளை ஒத்தித் துணங்கைக்கூத்தாடி.
‡ களித்து=களிக்க.

அமலையுற்றுக் கொக்கரித்துப்படுகள
அசுரரத்தத் திற்குளித்துத்திமியென
அடிநடித்திட் டிட்டிடித்துப்பொருதிடு
மயிலோனே-
அழகுமிக்கச் சித்ரபச்சைப்புரவியி
னுலவுமெய்ப்ப்ரத் த்யக்ஷநற்சற்குருபர
அருணையிற்சித் தித்தெனக்குத்தெளிவருள்
பெருமாளே. (௪௪)

507. கரிமுகக்கடகளிற் றதிககற்பகமதக்
கஜமுகத்தவுணனைக் கடியானை•
கடலையெட்பயறுநற் கதலியிற்கனிபலக்
கனிவயிற்றினிலடக் கிடவேழம்;
அரிமுகத்தினனெதிர்த் திடுகளத்திலினிமிகுத்
தமர்புரிக்கணபதிக் கிளையோனே-
அயிலெடுத்தசுரர்வெற் பலைவுறப்பொருதுவெற்
றியைமிகுத்தறுமுகக் குமரேசா;
நரிமிகுக்கிளைகளைப் பரியெனக்*கடிவளக்
கையில்பிடித்தெதிர்நடத் திடுமீசன்-
நடனமிப்படியிடத் தினுமிசைத்தரையினிற்
கரியுரித்தணிபவற் கொருசேயே;
†துரிபெறச்சரிபொழிற் கனவயற்கழகுளத்
‡துரியமெய்த்தரளமொய்த் திடவீறிச்-
சுரர்துதித்திடமிகுத் தியல்தழைத்தருணையிற்
சுடரயிற்சரவணப் பெருமாளே. (௪௫)

508. கருநிறஞ்சிறந் தகல்வனபுகல்வன
மதனதந்திரங் கடியனகொடியன
கனககுண்டலம் பொருவனவருவன §பரிதாவும்-

* கடிவளம்=கடிவாளம்.
† துரி=(காய்கனிகள் ஆகிய) சுமை.
‡ துரியமெய்த்தரளம்=தூய்மையான முத்துகள்.
§ படரி=வடவாமுகாக்கினி.

கடலுடன்படர்ந் தடர்வனதொடர்வன
விளையுநஞ்சளைந் தொளிர்வன*பிளிர்வன
கணையைநின்றுநின் றெதிர்வனமுதிர்வன
இளையோர்முன்;

†செருவைமுண்டகஞ் சிறுவனவுறுவன
களவுவஞ்சகஞ் சுழல்வனவுழலவன
தெனனதெந்தனந் தெனதெனதெனதென
எனநாதம-

தெரிசுரும்பைவென் றிடுவனஅடுவன
மருள்செய்கண்கள்கொண் டணைவர்தமுயிரது
திருகுகின்றமங் கையர்வசமழிதலை
யொழிவேனோ;

மருவுதண்டைகிண் கிணிபரிபுரமிவை
கலகலன்கலின் கலினெனஇருசரண்
மலர்கள்நொந்துநொந் தடியிடவடிவமு
மிகவேறாய்-

வலியசிங்கமுங் கரடியுமுழுவையு
முறைசெழும்புனந் தினைவிளையிதண்மிசை
மறவர்தங்கள்பெண் கொடிதனையொருதிரு
வுளநாடி;

அருகுசென்றடைந் தவள்சிறுபதயுக
சததளம்பணிந் ததிவிதகலவியு
ளறமருண்டுநெஞ் சவளுடன்மகிழ்வுட
னணைவோனே-

அமரர்சங்கமுங் குடிபுகநொடியினில்
நிருதர்சங்கமும பொடிபடஅமர்செய்து
அருணைவந்துதென் றிசைதனிலுறைதரு
பெருமாளே. (சகூ)

509. காணாதூரம் நீணாதவாரி
காதாரவாரம தன்பினாலே-

---

* பிளிர்வன=கொப்புளிப்பன. † செருவைமுண்டகஞ்சிறுவன=போர்முயன்றுஅகங்கொண்டுசிறுவன.

காலாளும்வேளும் ஆலாலநாதர்
காலால்நிலாவு*முனிந்து†பூமேல்;
நாணமேதோகை நூலாடைசோர
நாடோர்களேசவழிந்துநானே-
நாணபவாத மேலாகஆகம்
நாடோறும்வாடிமயங்கலாமோ;
சோணாசலேச பூணாரநீடு
தோளாறுமாறுமலிளங்குநாதா-
தோலாதவீர வேலாலடாத
சூராளன்மாளவெகுண்டகோவே;
சேணாடாமலோகம் வாழ்மாதியானை
நீராமகாகலசிநந்தமார்பா-
தேவாதிகூடு மூவாதிமூவர்
தேவாதிதேவர்கள தம்பிரானே. (௪௭)

510 காராடக்குழலாலாலங்கணை
கணைகள்சுழன்றிடவேமுகங்களி
னொப்பச்சிலையாலே‡மெற்புசி
யஞ்சள்கலக்கணிவாளிகொந்தள
நாதாடகலன்மேலாடக்குடி-
யின்பரசங்குடமாபளிதகொளி கொங்கைமாதர-
காசாசைசசெயலாலேசொக்கிடு
விந்தையர்கொஞ்சிடுமொரிளங்குயில்
போலேநற்றெருவூடாடித்§துயல்
தொங்கல்நெகிழ்ந்திடையேதுவண்டிட
கால்தாவிச்சதிபோடேசித்திர
மென்படம்புரிவாருடனசெயல் மிஞ்சலாகிச்;
சீராடிச்சிலநாள்போய்மெய்த்திரை
வந்துகலந்துயிரோடவங்கொரா

*=முனிய. † பூ=பூமி.
‡ மெ... மேலபூசி. § துயல்=அசைகின்ற.

டோடிப்பலநோயோடுத்தடி
கொண்டுகுராங்கெனவேநடந்துசொல்
சீயோடிக்கிடைபாயோடுக்கிய
டங்கியழிந்துயிரோடுளேஞ்சொளி யுங்கண்மாறிச்-
சேராமற்*பொறிகேளாமற்செவி
துன்பமொடின்பமுமேமறந்துபின்
ஊரார்சுற்றமுமாதோர்மக்களு
மண்டியுமண்டையுமேடகுவிந்தித
சீசீசிச்சிசிபோகாநற்சனி
யன்கடவென்றிடவேகிடநதுடல் மங்குவேனோ;

மாரோன்முப்புரநீறுயுற்றிட
அங்கியுமிழ்ந்திடுவோரிபமபுலி
தோல்சியத்தொடெ†யேகாசர்ச்சடை
கங்கையிளம்பிறையாரணிந்தவர்
மாடேறிக்கடலாலாலதனையு
முண்டவரெந்தை‡சிவானுபங்குறை
பென்றன்மாதா-
மாலோனுக்கிளையாள்மாபத்தினி
அம்பிகைசங்கரிமோககசுந்தரி
§வேதாமக்கலைரூபாள்முக்கணி
ரம்பியகொங்கையினுள்பயந்தருள்
மாஞானக்குமராதோகைப்பரி
யின்பதவண்குருவே ||யெனஞ்சுரர்
தொண்டுபாடச்;

சூரார்மக்கிடமாமேருக்கிட
அகடலெண்கிரியோடிடங்கொடு
¶தீபேழற்றிடபாதாளத்துறை
நஞ்சரவின்பணமாயிரங்கெட

---

* பொறி=அறிவு. † ஏகாசம்=போர்வை. ஏகாசர்=போர்வையை உடையவர். ‡ சிவஅனுபங்குஉறை=சிவபெருமானோடு கூட (அவர் திருமேனியில்) பாதியாக உறையும். § வேதாமம=வேதாகமம்.
|| எனஞ்சுரர்=எனஅம்சுரர். ¶ தீபுஏழ்=எழுதீவு.

சூழ்வாளக்கிரிதூளாகிப்பொடி
விண்கணிறைந்திடவேநடம்புரி கின்றவேலா-
சோர்வேதத்தலைமேலாடிச்சுக
பங்கயசெங்கரமோடகமபெற
வாகானக்குறமாதோடற்புத
*மங்குலணங்குடனேமகிழ்ந்துநல்
†தூணோடிச்சுடராகாசத்தைய
லைந்துவிளங்கருணாசலந்திகழ் தம்பிரானே. ()

511. காருமருவும்பெருகு சோலைமருவுங்கொடிய
‡காகளமடங்கவுமு ழங்குமதனாலே-
காலடரவமபமளி மேலடரவந்துபொரு
காமன்விடுவிஞ்சுகணை அஞ்சுமலராலே;
ஊருமுலகும்பழைய பேருகம்விளைந்ததென
வோரிரவுவந்தெனது சிந்தையழியாதே-
ஊடியிருகொங்கைமிசை கூடிவரிவண்டினமு
லாவியகடம்பமலர் தந்தருளுவாயே;
ஆருமரவும்பிறையு நீருமணியுஞ்சடைய
ராதிபரவும்படிநி னைந்தகுருநாதா-
ஆறுமுகமுங்குரவு மேறுமயிலுங்குறவி
யாளுமுரமுந்திருவும் அன்புமுடையோனே;
மேருமலையும்பெரிய சூருமலையுங்கரிய
வேலையலையும்பகையும் அஞ்சவிடும்வேலா-
மேதினியிறைஞ்சுமரு ணாபுரிவிளங்குதிரு
வீதியிலெழுந்தருளி நின்றபெருமாளே. (சகூ)

512. கீதவினோதமெச்சு குரலாலே-
கீறுமையார்முடித்த குழலாலே;
நீதியிலாதழித்து முழலாதே-

---

* மங்குல்அணங்கு=விண்ணுலகப்பெண்=தெய்வயானை.
† தூண்=சிவமாகிய அக்கினிஸ்தம்பம்.
‡ காகளம்= குயிலாகிய) எக்காளம்.

நீமயிலேறியுற்று வாவேணும்;
சூதமர்சூரருட்க பொருசூரா-
சோணகிரியிலுற்ற குமரேசா;
ஆதியர்காதொருச்சொ லருள்வோனே-
ஆனைமுகார்கனிட்ட பெருமாளே. (௫0)

513. குரவநறுமளககுழல் கோதிக்காட்டியெ
குலவுமிருகயல்கள்விழி மோதித்தாக்கியெ
குமுதமலரொளிபவள வாயைக்காட்டியெ
குழையாத-
குணமுறுகஇனிதுபயில் கூறிக்காட்டியெ
குலையஇருகலைநெகிழ வீசிக்காட்டியெ
*குடவியிடுமரிவையர்க ளாசைப்பாட்டிலெ
கொடியேன்யான்;
பொருளிளமைகலைமனமு மேகப்போக்கிப
புலையனிவனெனவுலக மேசப்போக்கென
பொறிவழியிலறிவழிய பூதச்சேட்டைகள்
பெருகாதே-
புதுமலர்கள்மருவுமிரு பாதத்தாற்றியெ
பொதுவகையிலருணைநிலை நீள்கர்த்தாத்தென
புகழடிமைதனையுனது பார்வைக்காத்திட
நினையாதோ;
அரவமுடனறுகுமதி யார்†மத்தாக்கமு
மணியுமொருசடைமவுலி நாதர்க்கேற்கவெ
அறிவரியவொருபொருளை போதத்தேற்றிய
அறிவோனே-
அழகுசெறிகுழலியர்கள் ‡வானத்தாட்டியர்
தருமமுதுசரவணையில் வாவித்தேக்கியெ
அறுசிறுவரொருவுடல மாகித்தோற்றிய
இளையோனே;

---

* குடவியிடும்=வளைக்கும்.

† மத்த அக்கமும்=ஊமத்தையும் உருத்திராக்ஷமும்.

‡ வானத்தாட்டியர்=கார்த்திகை மாதர்கள்.

சுரருலவஅசுரர்கள மாளத்தூட்பட
தூயவுமுடலயிலைவிடு மாவுக்ராக்ரம
சுவறியெழுகடலுமுறை யாகக்கூப்பிட
முனிவோனே-
துடிமுழவுமறவரிட சேவற்காட்டினில்
துணைமலரினணுகிதினை க்காவற்*காத்தனை
சுரியகுழல்குறமகளை வேளைக்காத்தணை
பெருமாளே. (ருக)

514. குழவியுமாய்மோகமோகித குமரனுமாய்வீடுகாதலி
குலவனுமாய்நாடுகாடொடு தடுமாறிக்-
குனிகொடுகூனீடுமாகிடு கிழவனுமாயாவிபோய்விட
விறகுடனேதூளியாவது †மறியாதாய்;
பழயசடாதாரமேனிகழ் கழியுடல்காண‡நிராதர
பரிவிலிவா§னூலைநாடொறு மடைமாறிப்-
பலபலவாம்யோகசாதக வுடல்கொடுமாயாதபோதக
பதியழியாவீடுபோயினி யடைவேனோ;
எழுகடல்தீமூளமேருவு மிடிபடவேதாவும்வேதமு
மிரவியும் ‖ வாய்பாறியோடிட முதுசேடன்-
இருளறுபாதாளலோகமு மிமையமுநீமுகவாள்கிரி
யிருபிளவாய்வீழமாதிர மலைசாய;
அழகியமாபாகசாதன னமரருமூர்பூதமாறுசெய்
அவுணர்தமாசேனைதூளெழ விளையாடி-
**அமரினைமேவாதசூரரைஅமர்செய்யும்வேலாயுதாவுயர்
அருணையில்வாழ்வாகமேவிய பெருமாளே.(ருஉ)

---

* காத்தனை=காத்த அன்னை. † அறியா தாய்=அறிந்து தாவி.

‡ நிராதர பரிவுஇலி வான் = நிராதாரமாகிய துன்பமில்லாத ஆகாயத்தில்.

§ நாலை மடைமாறி=கழிந்துபோகும் நாலங்குலப்பிரமாண வாயுவைக்கழியாது திருப்பி.

‖ வாய்பாறி=இடம்விட்டுப்பெயர்ந்து.

** அமரினை மேவாத=அமைதியைப் பொருந்தாத.

515. கோடானமடவார்கள் முலைமீதே-
கூர்வேலையிணையான விழியூடே;
ஊடாடியவரோடு முழலாதே-
ஊராகதிகழ்பாத மருள்வாயே;
நீடாழிசுழலதேசம் வலமாக-
நீடோடிமயில்மீது வருவோனே;
சூடானதொரு*சோதி மலைமேவு
சோணேசுபுகழ்தேவர் பெருமாளே. (ருகூ)

516. சிலைநுதல்வைத்துச் சிறந்தகுங்கும
திலதமுமிட்டுக் குளிர்ந்தபங்கய
திருமுகவட்டத் தமர்ந்தமென்குமிழ் தனிலேறிச்-
செழுமணிரத்னத் திலங்குபைங்குழை
தனைமுனிவுற்றுச் சிவந்துநஞ்சணி
செயலினையொத்துத் தயங்குவஞ்சகவிழிசீறிப்;
புலவிமிகுத்திட் டிருந்தவஞ்சியர்
பதமலருக்குட் பணிந்தணிந்தணி
புரிவளைகைக்குட் கலின்கலென்றிட அனுராகம்-
புகழ்நலமெத்தப் புரிந்துகொங்கையி
லுருகியணைத்துப் பெரும்ப்ரியங்கொடு
புணரினும்நிற்பொற் பதங்கள்நெஞ்சினுள்
மறவேனே;
கலைமதிவைத்துப் புனைந்துசெஞ்சடை
மலைமகள்பக்கத் தமர்ந்திருந்திட
கணகணகட்கட் கணின்கணென்றிட நடமாடும்-
கருணையனுற்றத் த்ரியம்பகன்தரு
முருகபுனத்திற் றிரிந்தமென்கொடி
கனதனவெற்பிற் கலந்தணைந்தருள் புயவீரா;
அலைகடல்புக்குப் பொரும்பெரும்படை
யவுணரைவெட்டிக் களைந்துவென்றுயர்
அமரர்தொழப்பொற் சதங்கைகொஞ்சிட
வருவோனே-

---

* சோதிமலை=திருவண்ணாமலை.

அடியவரச்சத் தழுங்கிடுந்துயர்
தனையொழிவித்துப் ப்ரியங்கள்தந்திடும்
அருணகிரிக்குட் சிறந்தமர்ந்தருள்
பெருமாளே. (௫௪)

517. சிவமாதுடனே அனுபோகமதாய்
சிவஞானமுதே பசியாறித்-
திகழ்வோடிருவோ ரொருரூபமதாய்
திசைலோகமெலா மனுபோகி;
இவனேயெனமா லயனோடமரோ
ரிளையோனெனவே மறையோத-
இறையோனிடமாய் விளையாடுகவே
யியல்வேலுடன்*மா அருள்வாயே;
†தவலோகமெலா முறையோவெனவே
தழல்வேல்கொடுபோ யசுராரைத்-
தலைதூள்படவேழ் கடல்தூள்படமா
தவம்வாழ்வுறவே விடுவோனே;
கவர்பூவடிவாள் குறமாதுடன்மால்
கடனுமெனவே அணைமார்பா-
கடையேன்மிடிதூள் படநோய்விடவே
‡கனல்மால்வரைசேர் பெருமாளே. (௫௫)

518. சினமுடுவல்நரிகழுகு டன்பருந்தின்கணங்
கொடிகெருடன்அலகைபுழு வுண்டுகெண்டின்புறுஞ்
செடமளறுமலசலமொ டென்புதுன்றுங்கலந்
துன்பமேவு-
செனனவலைமரணவலை ரண்டுமுன்பின்தொடர்ந்
தணுகுமுடலனைகவடி விங்கடைந்தம்பரஞ்
சிறுமணலையளவிடினு மங்குயர்ந்திங்குலந்
தொன்றுநாயேன்;

* மா=மயிலாகிய குதிரை. † தவ=மிகவும்.
‡ கனல் மால்வரை=திருவண்ணாமலை.

கனகபுவிநிழல்மருவி யன்புறுந்தொண்டர்பங்
குறுகஇனியருள்கிருபை வந்து*தந்தென்றுமுன்
கடனெனதுஉடலுயிரு முன்பரந்தொண்டுகொண்
டன்பரோடே-
கலவிகலமருவிவடி வஞ்சிறந்துன்பதம்
புணர்கரணமயில்புறமொ டின்புகொண்டண்டருங்
கனகமலர்பொழியஉன தன்புகந்தின்றுமுன்
சிந்தியாதோ;
தனனதனதனனதன தந்தனந்தந்தனம்
தகுகுகுகுகுகுகுகுகு டங்குடங்குந்தடந்
தவில்முரசுபறைதிமிலை டிங்குடிங்குந்தடந்
தணடர்பேரி-
தடுடுடுடுடுடுடுடு டுண்டுடுண்டுண்டுடுண்
டிமிடிமிடடகுர்திகுகுசங்குவெண்கொம்புதிண்
கடையுகமொடொலியகடலஞ்சவஞ்சன்குலஞ்
சிந்திமாள;
சினமுடுகிஅயிலருளி யும்பரந்தம்பரந்
திசையுமகர்புவியுளது மந்தரம்பங்கயன்
செகமுழுதுமகிழஅரி அம்புயன்தொண்டுகொண்
டஞ்சலபாட-
திருமுறுவலருளியென தெந்தையின்பங்குறுங்
கவுரிமனமுருகவொரு கங்கைகண்டன்புறுந்
திருவருணகிரிமருவு சங்கரன்கும்பிடுந்
தம்பிரானே. (௫௬)

519. செஞ்சொற்பண்பெற் றிடுகுடமாமுலை
கும்பத்தந்திக் குவடெனவாலிய
தெந்தப்பந்தித் தரளமதாமென விடாவி-
சிந்திக்கந்தித் திடுகளையாமுன
தங்கத்தம்பொற் பெதுவெனவோதுவ
†திண்டுப்புந்தித் திடுகனிதானுமு னிதழாமோ;

---

* தந்து=தர. † திண்டுப்புந் தித்திடு கனிதானும்=திண்துப்புந் தித்திடு கனிதானும். துப்பு=பவளம்.

மஞ்சொக்குங்கொந் தளகமெனுமிடை
கஞ்சத்தின்புற் றிடுதிருவேயிள
வஞ்சிக்கொம்பொப் பெனுமயிலேயென
முறையேய-
வந்தித்திந்தப் படிமடவாரொடு
கொஞ்சிக்கெஞ்சித் தினமவர்தாடொழு
மந்தப்புந்திக் கசடனொருநாளுன தடிசேர்வேன்;
நஞ்சைக்கண்டத் திடுபவராரொடு
திங்கட்பிஞ்சக் கரவணிவேணியர்
நம்பர்ச்செம்பொற் பெயரசுரேசனை யுகிராலே-
நந்தக்கொந்திச் சொரிகுடல்சோர்வர
*நந்திக்கம்பத் தெழுநரகேசரி
நஞ்சக்குண்டைக் கொருவழியேதென மிகநாடி;
வெஞ்சச்சிம்புட் சொருபமதானவர்
பங்கிற்பெண்கற் புடையபெணுயகி
விந்தைச்செங்கைப் பொலிசுதவேடுவர்புனமீதே-
வெண்டித்தங்கித் திரிகிழவாஅதி
துங்கத்துங்கக் கிரிஅருணபுரி
வெங்கட்சிங்கத் தடிமயிலேறிய பெருமாளே.()

520. தமரகுரங்களுங் காரிருட்பிழம்பு
மெழுகியஅங்கமும் பார்வையிற்கொளுந்து
தழலுமிழ்கண்களுங் காளமொத்தகொம்பும
உளகதக்கடமாமேல்-
தனிவருமந்தகன் பாசம்விட்டெறிந்து
அடவருமென்றுசிந தாகுலத்திருந்து
தமரழமைந்தருஞ் சோகமுற்றிரங்க
மரணபக்குவமாநாள்;
கமலமுகங்களுங் கோமளத்திலங்கு
நகையுநெடுங்கணுங் காதினிற்றுலங்கு
கனககுதம்பையுந் தோடும்வஜ்ரஅங்க
தமுமடற்சுடர்வேலும்.

* நந்தி=தோன்றி.

கடிதுலகெங்கணும் *தாடியிட்டுவந்த
மயிலுமிலங்கலங் காரபொற்சதங்கை
கழலொலிதண்டையங் காலுமொக்கவந்து
வரமெனக்கருள்கூர்வாய்;
இமகிரிவந்தபொன் பாவைபச்சைவஞ்சி
அகிலதலம்பெறும் பூவைசத்தியம்பை
யிளமுலையின்செழும் பால்குடித்திலங்கு
மியல்நிமிர்த்திடுவோனே-
இறைவரிறைஞ்சநின் றுகமப்ப்ரசங்க
முரைசெய்திடும்ப்ரசண் டாவிசித்துநின்ற
ரணமுகதுங்கவெஞ் சூருடற்பிளந்த
அயிலுடைக்கதிர்வேலா;
அமணரடங்கலுங் கூடலிற்றிரண்டு
கழுவிலுதைந்துதைந் தேறவிட்டுநின்ற
அபிநவதுங்ககங் காநதிக்குமைந்த
அடியவர்க்கெளியோனே-
அமரர்வணங்குகந் தாகுறத்திகொங்கை
தனில்முழுகுங்கடம் பாமிகுத்தசெஞ்சொ
லருணைநெடுந்தடங் கோபுரத்தமர்ந்த
அறுமுகப்பெருமாளே. (௫௨௰)

தனனதன தனனதன தாந்தன தாந்தனதம்
தனனதன தனனதன தாந்தன தாந்தனதம்
தனனதன தனனதன தாந்தன தாந்தனதம் தனதான

521. தமிழோதிய குயிலோமயி லாண்டலை யாம்புறவங்
கிளிகாடையி †னணிலேரளி யாங்குரல் வாய்ந்ததிசெந்
தகுமாமிட றொலியாரித ழாஞ்சுனை தேன்கனியின்
சுவைசேரும்-
தனபாரமு மலையாமென வோங்கிட மாம்‡பொறிசிந்
திடவேல்விழி நுதலோசிலை வான்பிறை மாநதுளிரின்
சரிரார்குழ லிருளாநகை யோங்கிய வான்கதிரின்
சுடர்பாய;

* தாடி=தாவடி=பிரயாணம். † அணில்=அன்றில்.
‡ பொறிசிந்திட=தேமல்சிதறிட.

குமிழ்நாசியின் முகமோமதி யாங்குளிர் சேங்கமலஞ்
சரிதோடிணை செவியாடுச லாங்கள பூங்கமுகங்
கொடிநூலிடை யுடையாரன மாம்ப்ரியர் மாண்புரிமின்
கொடிமாதர்.
குணமோடம ளியினுடினு மோங்கிய பூங்கமலஞ்
சரணூபுர குரலோசையு மேந்திடு மாண்டலையின்
கொடியோடெழு தரிதாம்வடி வோங்கிய பாங்கையுமன்
தகையேனே;
திமிதோதிமி திமிதோதிமி தாங்கண தீங்கணதொங்
தகுதோதகு தகுதோதகு டாங்குட தீங்கடதொங்
திகுடோடிமி டிமிடோடிமி டாங்குட டீந்தகமென்
றியல்பேரி.
திசைமூடுக டலேழ்பொடி யாம்படி யோங்கியவெங்
கரிதேர்பரி யசுரார்கள மாண்டிட நீண்டரவின்
சிரமீள்பட குவடோதுகள் வான்பெற வாங்கியவண்
கதிர்வேலா;
கமழ்மா*விதழ் சடையாரடி யேன்துயர் தீர்ந்திடவெண்
தழல்†மாபொடி யருள்வோரடல் மான்துடி தாங்கியவண்
கரர்மாடரு ளுமையாளெமை யீன்றவ ளீன்றருள்மென்
குரவோனே.
கடையேனிரு வினைநோய்மல மாண்டிட தீண்டியவொண்
சுகமோகினி வளிநாயகி பாங்கனெ ளும்பகர்மின்
கலைநூலுடை முருகா‡அழ லோங்கிய வோங்கலின்வள
பெருமாளே. (௫௧)

522. தலையைமழித்துச்சிவந்த துணியையரைக்குப்புனைந்து
சடையைவளர்த்துப்புரிந்து புலியாடை-
சதிரொடுவெப்பப்புனைந்து விரகொடுகெற்கப்புகுந்து
தவமொருசத்தத்தறிந்து திருநீறு;
கலையைமிகுத்திட்டணிந்து காணவலைக்குட்புகுந்து
கதறுநிலைக்கைக்கமர்ந்த எழிலோடே-
கனகமியற்றித்திரிந்து தவளுமெனைச்சற்றறிந்து
கவலையொழித்தற்கிரங்கி யருள்வாயே;

---

* இதழ்=இதழி=கொன்றை. † மா பொடி=திருநீறு.
‡ அழலோங்கிய வோங்கல்=திருவண்ணாமலை.

அலைகடலிற்கொக்கரிந்து மருவரையைப்பொட்டெறிந்து
மமருலகத்திற்புகுந்து முயரானை-
அருளொடுகைப்பற்றிவந்து மருணகிரிப்புக்கிருந்து
மறிவுளபத்தர்க்கிரங்கு மிளையோனே;
மலையைவளைத்துப்பறந்து மருவுபுரத்தைச்சிவந்து
வறிதுநகைத்திட்டிருந்த சிவனார்தம்-
மதலைபுனத்திற்புகுந்து நரவடிவுற்றுத்திரிந்து
மறமயிலைச்சுற்றிவந்த பெருமாளே. (௬௦)

523. தேதெனவாசமுற்ற கீதவினோதமெச்சு
தேனளிசூழமொய்த்த மலராலே-
சீறுமராவெயிற்றி லூறியகாளம்விட்ட
சீதநிலாவெறிக்கு மனலாலே;
போதனைநீதியற்ற வேதனைவாளிதொட்ட
போர்மதராஜனுக்கு மழியாதே-
போகமெலாநிறைத்து மோகவிடாய்மிகுத்த
பூவையைநீயணைக்க வரவேணும்;
மாதினைவேணிவைத்த நாதனுமோதுபச்சை
மாயனுமாதரிக்கு மயில்வீரா-
வானவர்சேனைமுற்றும் வாழமராபதிக்குள்
வாரணமானதத்தை மணவாளா;
மேதினியோர்தழைக்க வேயருணாசலத்து
வீதியில்மேவிநிற்கு முருகோனே-
மேருவைநீறெழுப்பி நான்முகனார்பதத்தில்
வேலடையாளமிட்ட பெருமாளே. (௬௧)

524. தோதகப்பெரும்ப யோதரத்தியங்கு
தோகையர்க்குநெஞ்ச மழியாதே-
சூலைவெப்படர்ந்த வாதபித்தமென்று
சூழ்பிணிக்கணங்க ளணுகாதே;

பாதகச்சமன்தன் மேதியிற்புகுந்து
பாசம்விட்டெறிந்து பிடியாதே-
*பாவலற்கிரங்கி நாவலர்க்கிசைந்த
பாடல்மிக்கசெஞ்சொல் தரவேணும்;
வேதமிக்கவிந்து நாதமெய்க்கடம்ப
வீரபத்ரகந்த முருகோனே-
மேருவைப்பிளந்து சூரனைக்கடிந்து
வேலையிற்றுளைந்த கதிர்வேலா;
கோதைபொற்குறிஞ்சி மாதுகச்சணிந்த
கோமளக்குருமபை புணர்வோனே-
கோலமுற்றிலங்கு சோணவெற்புயர்ந்த
கோபுரத்தமர்ந்த பெருமாளே. (௬௨)

525. பழமைசெப்பிய ழைத்துமிகுத்துடனே
முறைமசக்கிய ணைத்துநகக்குறி
படஅழுத்திநி தப்பமளித்தரு குறவாடிப்-
பதறியெச்சிலை யிட்ட இதழ்க்கொடு
விரவுகுத்திர வித்தைநவிளைப்பவர்
பலவிதத்திலு மற்பமெனச்செய லுடைமாதர்;
அழிதொழிற்குவி ருப்பொடுநத்திய
அசடனைப்பழி யுறஅவத்தனை
அடைவுகெட்டபு ரட்டனைமுட்டனை யடியேனை-
அகிலசத்தியு மெட்டுறுசித்தியு
மெளிதெனப்பெற வெட்டவெளிப்படு
மருணபொற்பத முற்றிடவைப்பது
மொருநாளே;
கொழுமையிற்பெரு நெட்டலைகைத்திரள்
கரணமிட்டுந கைத்தமிதப்படு
†குலிலியிட்டக ளத்திலெதிர்த்திடு மொருசூரன்-

* பாவலன்=உக்கிரதேவர். † குலிலி=படைமுக ஒலிக் குறிப்பு.

குருதிகக்கிய திர்த்துவிழப்பொரு
நிசிசரப்படை பொட்டெழவிக்ரம
குலவுசத்திகை விட்டருள்கெர்ச்சித மயில்வீரா;
தழையுடுத்தகு றத்திபதத்துணை
வருடிவட்டமு கத்தலமைக்குறி
தடவிவெற்றிக நித்தமுலைக்குவ டதன்மீதே-
சதிர்பெறத்தழு விப்புணர்வித்தக
முனிவர்சித்தர்க ணத்தர்துதித்திடு
தலைமைபெற்றரு ணைப்பதியிற்றிகழ் பெருமாளே. (௬௩)

526. பாணமலரதுதைக்கும் படியாலே-
பாவியிளமதிகக்குங் கனலாலே;
நாணமழியவுரைக்குங் குயிலாலே-
நாளுமயலின்ளைக்குந் தரமோதான்;
சேணிலரிவையணைக்குந் திருமார்பா-
தேவர்மகுடமணக்குங் கழல்வீரா;
காணஅருணையில்நிற்குங் கதிர்வேலா-
காலன்முதுகைவிரிக்கும் பெருமாளே. (௬௪)

527. பாலாய்நூலாய் தேனாய்*நீளாய்
பாகாய்வாய்சொற் கொடியார்தாம்-
†பாடாவாடா வேடாவாலே
பாடாயீடற் றிடைபீறும்;
தோலாலேகா லாலேயூனா
லேசூழ்பாசக் குடில்மாசு-
தோயாமாயா வோயாநோயால்
சோர்வாய்மாளக் கடவேனோ;

---

* நீள் ஆய் பாகாய்=நீண்டுவருகின்ற ஆய்ந்தபாகாய்,
† பாடா ஆடாவேள் தாவாலே=பாடி ஆடிவேட்கின்ற வலிமையினாலே.

ஞாலாமேலா வேதாபோதா
நாதா*சோதிக் கிரியோனே-
ஞானசாரா வானுள்கோனே
நானுவேதப பொருளோனே;
வேலாபாலா †சீலாகாரா
வேளேவேடக் கொடிகோவே-
வீராதாரா ஆருதாரா
வீராவீரப பெருமாளே. (௩௫)

28. புணர்முலை மடந்தைமாதர்
வலையினி லுழன்றநேக
பொறியுட லிறந்துபோன தளவேதுன்-
புகழ்மறை யறிந்துகூறு
மினியென தகமபொருவி
பொருளென நினைந்துநாபெ ணிடர்தீர;
மணமுணர் மடந்தைமாரொ
டொளிர்திரு முகஙகளாறு
மணி‡கிரி யிடஙகொளபானு வெயிலாசை-
வரிபர வனநதகோடி
முனிவாகள புகழ்நதுபோத
மயில்மிசை மகிழ்ந்துநாடி வரவேணும்;
பணைமுலை யரமபைமார்கள்
குயிலகிளி யினஙகளபோல
பரிவுகொ டுகந்துவேத மதுகூற-
பறைமுர சனநதபேரி
முறைமுறை ததும்பநீசர்
படைகட விறந்துபோக விடும்வேலா;
அணிசுக நரம்புவீணை
குயில்புற வினங்கள்போல
அமளியில் களங்களோசை வளர்மாது-

---

* சோதிக்கிரி=திருஅண்ணமலை.
† சீல ஆகாரா=பரிசுத்தவடிவனே. ‡ கிரியிடம்=கிரீடம்.

அரிமகள் மணங்கொடேகி
யெனதிட ரெரிந்துபோக
அருணையின் விலங்கல்மேவு பெருமாளே. ()

529. புலையனுனமாவீனன் வினையிலேகும்பாதன்
பொறையிலாதகோபீகன் முழுமூடன்-
புகழிலாததாமீகன் அறிவிலாதகாபோதி
பொறிகளோடுபோய்வீழு மதிசூதன்;
நிலையிலாதகோமாளி கொடையிலாதவூதாரி
நெறியிலாதவேமாளி குலபாதன்-
நினதுதாளைநாடோறு மனதிலாசைவீடாமல்
நினையுமாறுநீமேவி யருள்வாயே;
சிலையில்வாளிதானேவி பெதிரிராவணார்தோள்கள்
சிதையுமாறுபோராடி யொருசீதை-
சிறையிலாமலேகூடி புவனிமீதிலேவீறு
திறமியானமாமாயன் மருகோனே;
அலையமேருமாசூர் பொடியதாகவேலேவி
அமரதாடியேதோகை மயிலேறி-
அதிகதேவரேசூழ உலகமீதிலேகூறும்
அருணைமீதிலேமேவு பெருமாளே. (௬௭)

530. *போககற்பக்கடவுட் பூருகத்தைப்புயலைப்
பாரியைப்பொற்குவையுச் சிப்பொழுதிலீயும்-
போதுடைப்புத்திரரைப் போலவொப்பிட்டுலகத்
தோரைமெச்சிப்பிரியப் பட்டுமிடிபோகத்;
த்யாகமெத்தத்தருதற் காசுநற்சித்திரவித்
தாரமுட்பட்டதிருட் டுக்கவிகள்பாடி-
தேடியிட்டப்படுபொற் பாவையர்க்கிட்டவர்கட்
சேல்வலைப்பட்டடிமைப் பட்டுவிடலாமோ;

* போககற்ப கடவுட் பூருகம்=இஷ்டபோகத்தை யளிக்கும் கற்பகமாகிய தெய்வவிருக்ஷம்.

ஆகமப்பத்தருமற் றூரணச்சுத்தருமுற்
றுதரிக்கைக்கருணைத் துப்புமதில்சூழும்-
ஆடகச்சித்ரமணிக் கோபுரத்துத்தாதிக்
காகவெற்றிக்கலபக கற்கியமர்வோனே;
தோகையைப்பெற்றஇடப் பாக*ரொற்றைப்பகழித்
†தூணிமூட்டச்சுவறத் திக்கிலெழுபாரச்-
சோதிவெறபெட்டுமூதிரத் தூளிதப்பட்டமிழச்
சூரனைப்பட்டுருவத் தொட்டபெருமானே. ()

531 மானைவிடத்தைத் தடத்தினிற்கயல்
மீனைநிரப்பிக் குனித்துவிட்டணை
வாளியைவட்டச் சமுத்திரத்தினை வடிவேலை-
வாளை ‡வனத்துற் பலத்தினைச் §செல
மீனைவிழிக்கொப்பெனப்பிடித்தவர்
மாயவலைப்பட் டிலைத் ‖துடக¶குமல
மணநாறும்;
ஊனவிடத்தைச் சடக்கெனக்கொழு
ஆறுமுபந்தக் கருத்தடத்தினை
யூதுபிணத்தைக் குணத்ரயத்தொடு தடுமாறும்-
ஊசலைநித்தத் த்வமறறசெத்தையு
பாதியையொப்பித் துனிப்பவத்தற
வேடிகைசெலுத்திப் ப்ரமிக்குமிப்ப்ரமை
தெளியாதோ;
சானகிகற்புத் தனைச்சுடத்தன
சோகவனத்திற் சிறைப்படுத்திய
தானையரக்கற் குலத்தரத்தனை வருமாளச்-

---

* ஒற்றைப்பகழி=திரிபுரசம்மாரத்தில் அம்பாக உற்ற விஷ்ணு.
† தூணி=அந்த அம்பு தங்கும் கூடாகிய கடல்.
‡ வனம்=ஜலம். § செலமீன்=சேல் அம் மீன்.
‖ துடக்கு=மகளிர் சூதகம்.
¶ உமல்=ஊமல். ஊமல் மணம்=துர்நாற்றம்.

சாலைமரத்துப் புறத்தொளித்தடல்
வாலியுரத்திற் சரத்தைவிட்டொரு
தாரைதனைச்சுக் க்ரிவற்களித்தவன் மருகோனே;

சோனைமிகுத்துத் திரட்புனத்தினி
லானைமதத்துக் கிடக்குமற்புத
சோணகிரிச்சுத் தர்பெற்றகொற்றவ மணிநீபத்-

தோள்கொடுசக்ரப் பொருப்பினைப்பொடி
யாகநெருக்கிச் செருக்களத்தெதிர்
சூரனைவெட்டித் துணித்தடக்கிய பெருமாளே.

532. மேகமொத்தகுழ லார்சிலைப்புருவ
வாளியொத்தவிழி யார்முகக்கமல
மீதுபொட்டிடழ கார்களத்திலணி வடமாட-

மேருவொத்தமுலை யார்பளப்பளென
மார்புகுத்திபுய வார்வளைக்கடகம்
வீறிடத்துவளு நூலொடொத்தஇடை யுடைமாதர்;

தோகைபக்ஷிநடை யார்பதத்திலிடு
நூபுரக்*குரல்கள் பாடகத்துகில்கள்
சோரநற்றெருவு டேநடித்துமுலை விலைகூறிச்-

சூதகச்சரச மோடெயெத்திவரு
வோரைநத்திவிழி யால்மருட்டிமயல்
தூள்†மருத்திடியி ரேபறிப்பவர்க ளுறவாமோ;

சேகணச்செகண தோதிமித்திகுட
டாடுடுட்டமட டீகுதத்தொகுர்தி
தீதகத்திமித தோவுடுக்கைமணி முரசோதை-

---

* குரல்கள்பாட ஆகத்துகில்கள் சோர எனப்பிரிக்க ஆகத்துகில்=மார்புவஸ்திரம். † மருத்திடு=மருக்திட்டு.

தேசமுட்கவர ஆயிரச்சிரமு
முளிபட்டுமக மேருவுக்கவுணர்
தீவுகெட்டுமுறை யோவெனக்கதற
விடும்வேலா;
ஆகமத்திபல காரணத்தியெனை
யீணசத்திஅரி ஆசனத்திசிவ
ஞகமுற்றசிவ காமிபத்தினியின் முருகோனே-
ஆரணற்குமறை தேடியிட்டதிரு
மால்மகட்சிறுமி மோகசித்ரவளி
ஆசைபற்றிஅரு ணசலத்தின்மகிழ்
பெருமாளே. (௭0)

533 மொழிபநிறங்கறுத்து மகரவினங்கலக்கி
முடியவளைந்தரற்று கடலாலும்-
முதிரவிடம்பரப்பி வடவைமுகந்தழற்குள்
முழுகிபெழுந்திருக்கு நிலவாலும்;
மழையளகந்தரித்த கொடியிடைவஞ்சியுற்ற
மயல்தணியும்படிக்கு நினைவாயே-
மரகததுங்கவெற்றி விகடநடங்கொள்சித்ர
மயிலினில்வந்துமுத்தி தரவேணும்;
அழகியமென்குறத்தி புளகிதசந்தனத்தி
னமுததனம்படைத்த திருமார்பா-
அமரர்புரந்தனக்கு மழகியசெந்திலுக்கு
மருணைவளம்பதிக்கு மிறையோனே;
எழுபுவனம்பிழைக்க அசுரர்சிரந்தெறிக்க
எழுசயிலந்துளைத்த சுடர்வேலா-
இரவிகளந்தரத்தர் அரியர்பங்கயத்த
ரிவர்கள்பயந்தவிர்த்த பெருமாளே. (௭௧)

534. வடவையனலூடுபுக்கு முழுகியெழுமாமதிக்கு
மதுரமொழியாழிசைக்கு மிருநாலு-
வரைதிசைவிடாதுசுற்றி யலறுதிரைவாரிதிக்கு
மடியருவவேள்சணைக்கு மறவாடி;

நெடுகனகமேருவொத்த புளகமுலை*மாதருக்கு
நிறையுமிகுகாதலுற்ற மயல்தீர-
நினைவினொடுபீலிவெற்றி மரகதகலாபசித்ர
நிலவுமயிலேறியுற்று வரவேணும்;
மடலவிழுமாலைசுற்று புயமிருபதோடுபத்து
மவுலியறவாளிதொட்ட அரிராமன்-
மருகபலவானவர்க்கு மரியசிவனார்படிக்க
மவுனமறையோதுவித்த குருநாதா;
இடையரியுலாவுமுக்ர அருணகிரிமாநகர்க்கு
ளினியகுணகோபுரத்தி லுறைவோனே;
எழுபுவியளாவுவெற்பு முடவிநெடுநாகமெட்டு
மிடையுருவவேலைவிட்ட பெருமாளே. (௭௪)

௫௩௫. விடும்தவேள்வாளியின் விசைபெறு†மாலாகல
விழிகொடுவாபோவென வுரையாடும்-
விரகுடனூருயிர மனமுடைமாபாவிகள்
ம்ருகமதகோலாகல முலைதோய;
அடையவுமாசாபர வசமுறுகோமாளியை
அவனியுமாகாசமும் வசைபேசும்-
அசடஅநாசாரனை அவலனைஅபாசனை
அடியவரோடாள்வது மொருநாளே;
வடகுலகோபாலர்த மொருபதினாறாயிரம்
வனிதையர்தோள்தோய்தரு மபிராம-
மரதகநாராயணன் மருமகசோணாசல
மகிபசதாகாலமு மிளையோனே;
உடுபதிசாயாபதி சுரபதிமாயாதர
உலகுயவாரார்கலி வறிதாக-
உயரியமாநாகமு நிருதருநீறாய்விழ
ஒருதனிவேலேவிய பெருமாளே. (௭௫)

---

* மாதருக்கு=மாது அருக்கு. அருக்கு=அருமை. † ஆலாகல=ஆலகால.

536. விதியதாகவே பருவமாதரார்
விரகிலேமனந் தடுமாறி-
விவரமானதொ ரறிவுமாறியே
வினையிலேஅலைந் திடுமூடன்;
முதியமாதமி ழிசையதாகவே
மொழிசெய்தேநினைந் திடுமாறு-
முறைமையாகநி னடிகள்மேவவே
முனிவுதீரவந் தருள்வாயே;
சதியதாகிய அசுரர்மாமுடி
தரணிமீதுகுஞ் சமராடி-
சகலலோகமும் வலமதாகியே
தழையவேவருங் குமரேசா;
அதிகவானவா கவரிவீசவே
அரியகோபுரந் தனில்மேவி-
அருணைமீதிலெ மயிலிலேறியே
அழகதாய்வரும் பெருமாளே. (௭௪)

537. விந்துப்புளகித இன்புற்றுருகிட—
சிந்திக்கருவினி லுண்பசிறுதுளி
விரித்த*கமலமெல தரிததுமொருசுழி
யிரத்தகுளிகையொ டுதித்துவளர்மதி
விண்டுறறருள்பதி கண்டுற்றருள்கொடு
†மிண்டிச்செயலினி ரம்பித்துருவொடு
மெழுக்கிலுருவென வலித்துஎழுமதி
சழித்து‡வயிர்குட முகுபபொருபதில்
விஞ்சைச்செயலகொடு கஞ்சச்சலவழி
வந்துப்புவிமிசை பண்டைச்செயலகொடு
விழுப்பொடுடல்தலை அழுக்குமலமொடு
கவிழ்த்துவிழுதழு துகுபபஅனைவரு மருள்கூர

---

* கமலமெல=கமலமேல. † மிண்டி=வலிகொண்டு.
‡ வயிறு என்பது சந்தநோக்கி வயிர் என்றாயிற்று.

மென்*பற்றுருகிமு கந்திட்டனைமுலை
யுண்டித்தரகொடு†வுண்கிச்‡சொலிவளர்
வளத்தொடனைமல சலத்தொ§டுழைகிடை
துடித்துதவழ்நடை வளர்த்தியெனதகு
வெண்டைப்பரிபுர தண்டைச்சரவட
முங்கட்டியல்முடி பண்பித்தியல்கொடு
விதித்தமுறைபடி படித்துமயல்கொள
தெருக்களினில்வரு வியப்பஇளமுலை
விந்தைக்கயல்விழி கொண்டற்குழல்மதி
துண்டக்கரவனை கொஞ்சக்குயில்மொழி
விடுப்பதுதைகலை நெகிழ்த்திமயிலென
நடித்தவர்கள்மயல் ||பிடித்திடவர்வரு
வழியேபோய்
சந்தித்துறவொடு பஞ்சிட்டணைமிசை
கொஞ்சிப்பலபல விஞ்சைச்சரசமொ
டணைத்துமலரிதழ் கடித்துஇருகர
மடர்த்தகுவிமுலை யழுத்தியுர¶மிடர்
சங்குத்தொனியொடு பொங்கக்குழல்மலர்
சிந்தக்கொடியிடை தங்கிச்சுழலிட
சரத்தொடிகள்வெயி லெறிப்பமதிநுதல்
வியர்ப்பபரிபுர மொலிப்பஎழுமத
சப்பத்திதுசெய வின்பத்திருள்கொடு
வம்பிற்பொருள்கள்வ ழங்கிற்றிதுபினை
சலித்துவெகுதுய ரினைப்பொடுடல்பிணி
**பிடித்திடனைவரும் நகைப்பகருமயிர்
நரைமேவி-

---

* பற்றுருகி=பாசத்தினுலுருகி. †உண்கி=உண்டு.
‡ சொலி=சொலிந்து. § உழைகிடை=உழைந்துக்கிடந்து.
|| பிடித்திட அவர்வரு எனப்பிரிக்க.
¶ மிடறு என்பது சந்தநோக்கி மிடர் என்றாயிற்று. மிடறு = கழுத்து. ** பிடித்திட அனைவரும் எனப்பிரிக்க.

தன்கைத்தடிகொடு குந்திக்*கவியென
உந்திக்கசனம றந்திட்டுளமிக
சலித்துவுடல்சல மிருக்குமதிசெவி
விழிப்புமறைபட கிடத்திமனையவள்
சம்பத்துறைமுறை யணைடைக்கொளுகையில்
சண்டக்கருநம னண்டிக்கொளுகயி
றெடுத்துவிசைகொடு பிடித்துவுயிர்தனை
பதைப்பதனிவழி யடித்துகொடுசெல
சந்தித்தவரவர் பங்குக்கழுதுஇ
ரங்கப்பிணமெடு மென்றிட்டறைபறை
தடிப்பசுடலையி லிறக்கிவிறகொடு
கொளுத்தியொருபிடி பொடிக்குமிலையெனு
முடலாமோ;

திந்தித்திமிதிமி திந்தித்திமிதிமி
திந்தித்திமிதிமி திந்தித்திமிதிமி
திமித்திதிமிதிமி திமித்திதிமிதிமி
திமித்திதிமிதிமி திமித்திதிமிதிமி
என்பத்துடிகள்த வுண்டைக்கிடுபிடி
பம்பைச்சலிகைகள் சங்கப்பறைவளை
திகுர்த்ததிகுதித டுடுட்டுடுடுடு
டிடிக்குகிகவென வுடுக்கைமுரசொடு
செம்பொற்குடமுழ வுந்தப்புடன்மணி
பொங்கச்சுரர்மலர் சிந்தப்பதமிசை
செழித்தமறைசிலர் துதிப்பமுனிவர்கள்
களித்துவகை†மணி முழக்கஅசுரர்கள் களமீதே
சிந்திக்குருதிக ளண்டச்சுவரகம்
ரம்பக்கிரியொடு பொங்கிப்பெருகிவெ
சிவப்பதுதில்கரி மதர்த்தபுரவிகள்
சிரத்தொடிரதமு மிதப்பதிணையொடு

* கவி=குரங்கு. † மணி=மன்னி=பொருந்தி.

செம்புட்கழுகுக ளுண்டாத்தலைகள்த
துமபக்கருடன டனம்*கொட்டிடகொடி
மறையபநரிகண மிருபய குறளிகள்
நடிக்கஇருள்மலை கொளுதநியலைகடல
செம்பொற்பவளமு டங்கிக்கமர்விட
வெநதிட்†டிகமலை விண்டுக்துகள்பட
‡சிமகதமூரகனு முழக்கிவிடபட
மடைத்தசதமுடி நடுக்கியலைபட
விடுமவேலா;

தொந்தத்தொகுகுட என்பக்கழலொலி
பொங்கப்பரிபுர செம்பொற்பதமணி
சுழற்றிநடமிடு நிருத்தராயன்முடி
காத்தராரிகரி யுரித்தகடவுள்மெய்
தொண்டர்க்கருள்பவர் வெநதக்துகளணி
கங்கைபபணிமதி கொன்றைச்சடையினா
தொடுத்தமதனுரு பொடித்தவிழியினா
மிகுத்தபுரமதை யெரித்தநகையினர்
தும்பைத்தொடையினர் கண்டக்கறையினர்
தொந்திககடவுளை தநதிட்டவரிட
சுகத்திமழுவுழை காத்திமரகத
நிறத்திமுயலக பதத்திஅருளிய முருகோனே.

துண்டச்சசிநுதல் சம்பைக்கொடியிடை
ரம்பைக்கரசியெ §னும்பற்றருமகள
சுகிப்பமணவறை களிக்கஅணையறு
முகத்தொடுறமயல் செழித்ததிருபுய
செமபொற்கரகம லம்பத்திருதல
மய்பொற் ‖ சசியெழ சந்தப்பலபடை

---

* கொட்டிட=கோட்டிட=வளைக்க, வட்டமிட.

† இகமலை=இங்குள்ளமலைகள், ‡ சிமக்கும்=சுமக்கும்.

§ உம்பல் தருமகள்=தெய்வயானை யம்மை.

‖ சசியெழ=சந்திரனைப்போல ஒளியெழ.

செறித்தகதிர்முடி கடப்பமலர்தொடை
சிறப்பொடொருகுடில் மருத்துவனமகள்
தொந்தப்புணர்செயல் கண்டுற்றடியெனி
டஞ்சற்பொடிபட முன்புற்றருளயில்
தொடுத்துமிளநகை பரப்பிமயில்மிசை
நடித்து*அழல்கிரி பதிக்குள்மருவிய
பெருமாளே. (எரு)

538. விரகொடுவளைசங் கடமதுதருவெம்
†பிணிகொடுவிழிவெங் கனல்போல-
வெறிகொடுசமனின் றுயிர்கொளும்நெறியின்
றெனவிதிவழிவந் திடுபோதிற்;
கரவடமதுபொங் கிடுமனமொடுமங்
கையருறவினர்கண் பனல்பாயுங்-
கலகமும்வருமுன் குலவினைகளையுங்
கழல்தொழுமியல்தந் தருள்வாயே;
பரவிடுமவர்சிந் தையர்விடமுமிழும்
படவரவணைகண் டுயில்‡மாலம்-
பழமறைமொழிபங் கயனிமையவர்தம்
பயமறவிடமுண் டெருதேறி;
அரவொடுமதியம் பொதிசடைமிசைகங்
கையுமுறஅனலங் கையில்மேவ-
அரிவையுமொருபங் கிடமுடையவர்தங்
கருணையில்மருவும் பெருமாளே. (எசு)

539. வீறுபுழுகானபனி நீர்கள்மலதோயல்விடு
மேருகிரியானகொடு தனபார-
மீதுபுரளாபரண சோதிவிதமானநகை
மேகமனுகாடுகட லிருள்மேவி;

* அழல்கிரி பதி=திருவண்ணாமலை. † பிணி=பாசக்கயிறு.
‡ மால் அம் பழமறைமொழிபங்கயன் எனப்பிரிக்க.

நாறுமலர்வாசமயிர் நூலிடையதேதுவள
நாணமழிவார்களுட னுறவாடி-
காடியதுவேகதியெ னுசுழலுமோடனைநின்
ஞானசிவமானபத மருள்வாயே;
கூறுமடியார்கள்வினை நீறுபடவேஅரிய
கோலமயிலானபத மருள்வோனே-
கூடஅரனோடுநட மாடரியகாளியருள்
கூருசிவகாமியுமை யருள்பாலா;
ஆறுமுகமானநதி பாலகுறமாதுதன
மாரவிளையாடிமண மருள்வோனே-
ஆதிரகுராமஜய மாலின்மருகாபெரிய
ஆதியருணபுரியில் பெருமாளே. (௭௭)

## திருக்காளத்தி.

540. *சரக்கேறித்தப் பதிவாழ்தொந்தப்
பரிக்காயத்திற் பரிவோடைந்துச்
சதிங்காரர்ப்புக் குலைமேவிந்தச் செயல்மேவிச்-
சலித்தேமெத்தச் சமுசாரம்பொற்
சுகித்தேசுற்றத் தவரோடின்பத்
தழைத்தேமெச்சத் தயவோடிந்தக் குடிபேணி;
†குரக்கோணத்திற் கழுநாயுண்பக்
குழிக்கேவைத்துச் சவமாய்நந்திக்
குழிற்கேகத்திப் பழுதாய்மங்கப் படுவேனைக்-
குறித்தேமுத்திக் கு‡மறுவின்பத்
தடத்தேபற்றிச் சகமாயம்பொய்க்
குலக்கால்வற்றச் சிவஞானம்பொற்
கழல்தாராய்;

* சரக்கு ஏறு இந்த பதி=பொருள்கள் மிகுந்த இப்புவியிடம்.
† குரக்கோணத்திற்கழு=குளம்புத்தன்மையுள்ள மூக்கையுடைய கழு ‡ மறு=மாறு.

புரக்காடற்றுப் பொடியாய்மங்கக்
கழைச்சாபத்*தைச் சடலானுங்கப்
புகைத்†தீயற்றப் புகலோரன்புற் றருள்வோனே-
புடைத்தேளட்டுத் திசையோரஞ்சத்
தனிக்கோலத்துப் புகுசூர்மங்கப்
புகழ்ப்போர்சத்திக் கிரையானந்தத்
தருள்வோனே;
திருக்கானத்திற் பரிவோடந்தக்
குறக்கோலத்துச் செயலாளஞ்சத்
திகழ்ச்சீரத்திக் ‡கழல்வாவென்பப் புணர்வோனே-
சிவபபேறுக்குக் கடையேன்வந்துட்
புகச்சீர்வைத்துக் கொளும்ஞானம்பொற்
றிருக்காளத்திப் பதிவாழ்கந்தப் பெருமாளே. ()

541. சிரத்தானத்திற் பணியாதே-
செகத்தோர்பற்றைக் குறியாதே;
வருத் தாமற்றொப் பிலதான-
மலர்த்தாள்வைத்தெத் தனைஆள்வாய்;
நிருத்தாகர்த்தத் துவநேசா-
நினைத்தார்சித்தத் துறைவோனே;
திருத்தாள்முத்தர்க் கருள்வோனே-
திருக்காளத்திப் பெருமாளே. (௨)

542. பங்கயனூர்பெற் றிடுஞ்சராசர
அண்டமதாயுற் றிருந்தபார்மிசை
பஞ்சவர்கூடித் திரண்டதோரகர உருவாயே-
பந்தமதாகப் பிணிந்தஆசையில்
இங்கிதமாகத் திரிந்துமாதர்கள்
பண்பொழிசூதைக் கடந்திடாதுழல் படிறுயே;

* ஐ சடலான்=அழகிய தேகத்தையுடைய மனமதன்.
† தீ பற்று அ புகலோர்=அக்கினிபற்றச்செய்த அந்தவெற்றியாளர்.
‡ அழல் வா என்ப=அழாதே, வா என்ன.

சங்கடனாகித் தளர்ந்துநோய்வினை
வந்துடலமூடக் கலங்கிடாமதி
தந்தடியேனைப் புரந்திடாயுன தருளாலே-
சங்கரர்வாமத் திருந்தநூபுர
சுந்தரியாதித் தருஞ்சுதாபத
தண்டையனேகுக் குடம்பதாகையின் முருகோனே;
திங்களுலாவப் பணிந்தவேணியர்
பொங்கரவாடப் புனைந்தமார்பினர்
திண்சிலைசூலத் தழுந்துபாணியர் நெடிதாழ்வார்-
சிந்துவிலேயுற் றெழுந்தகாளவி
டங்களமீதிற் சிறந்தசோதியர்
இன்புயமீதிற் றவழ்ந்துவீறிய குருநாதா;
சிங்கமதாகத் திரிந்தமால்கெரு
வம்பொடு தாபப் பரந்துசீறிய
சிம்புளதாகச் சிறந்தகாவல வருகோமான்-
செங்கதிரோனைக் கழிநதிவினை
தீர்ந்திடவேதற் றவஞ்செய்தேறிய
*தென்கயிலாயத் தமர்ந்துவாழ்வருள்
பெருமாளே. (௯)

## சிதம்பரம்.

---

543. கனகசபைமேவு மெனதுகுருநாத
கருணைமுருகேசப் பெருமாள்காண்-
கனகநிறவேத னபயமிடமோது
கரகமலசோதிப் பெருமாள்காண்;
வினவுமடியாரை மருவிவிளையாடு
விரகுரசமோக பெருமாள்காண்-

---

* தென்கயிலாயம் என்பது திருக்காளத்தி.

விதிமுனிவர்தேவ ரருணகிரிநாதர்
விமலசரசோதிப பெருமாள்காண்;
சனகிமணவாளன் மருகனெனு*வேத
சதமகிழ்குமாரப் பெருமாள்காண்-
சரணசிவகாமி †யிரணகுலகாரி
தருமுருகாமப பெருமாள்காண்;
இனிதுவனமேவு மயிர்தகுறமாதொ
டியல்பரவுகாதற் பெருமாள்காண்-
இணையி‡லிபதோகை மதியின்மகளோடு
மியல்புலியுர்வாழ்பொற் பெருமாளே. (௧)

514. கைத்தருணசோதி யத்திமுகவேத
கற்பகசகோத்ரப் பெருமாள்காண்-
கற்புசிவகாமி நித்யகலியாணி
கத்தர்குருநாதப் பெருமாள்காண்;
§வித்துருபாரம ருக்குமருகாண
வெற்றியயில்பாணிப பெருமாள்காண்-
வெற்புளகடாக முட்குதிரவீசு
வெற்றிமயில்வாகப பெருமாள்காண்;
சித்ரமுகமாறு முத்துமணிமார்பு
திக்கினினிலாதப் பெருமாள்காண்-
திக்கிமிதிதீதெ ஞைத்தவிளையாடு
சித்திரகுமாரப பெருமாள்காண்;
சுத்த‖ விரசூரர் பட்டுவிழவேலை
தொட்டகவிராஜப பெருமாள்காண்-
துப்பு¶வளியோடு மபபுலியுர்மேவு
சுத்தசிவஞானப் பெருமாளே. (௨)

---

* வேதசகம்=வேதமெல்லாம்.
† இரணகுலஹரி=போர்செய்யும் அவுணர்குலத்தை ஹரித்தவள்.
‡ இபதோகை=தேவயானையம்மை.
§ வித்துருபம்=வித்துருபம்=மழைந்துளிபெய்யும் மேகவண்ணம்.
‖ வீர. ¶ வள்ளியோடும்.

545. இருவினையின்மதிமயங்கித் திரியாதே-
எழுநரகிலுழலுநெஞ்சுற் றலையாதே;
பரமகுருஅருளநினைந்துட் டுணர்வாலே-
பரவுதரிசனையையெனற்றெற் கருள்வாயே;
தெரிதமிழையுதவுசங்கப் புலவோனே-
சிவனருளுமுருகசெம்பொற் கழலோனே;
கருணைநெறிபுரியுமன்பர்க் கெளியோனே-
கனகசபைமருவுகந்தப் பெருமாளே. (ரு)

546. குகனெகுருபா னெயெனநெஞ்சிற்
புகழஅருள்கொடு நாவினிலின்பக்
குமுளிசிவவமு தூறுகவுந்திப் பசியாறிக்-
கொடியஇருவினை மூலமும்வஞ்சக்
கலிகள்பிணியிவை வேரொடுசிந்திக்
குலையநமசிவ யோமெனகொஞ்சிக் களிகூரப்;
பகலுமிரவுமி லாவெளியின்புக்
குறுகியிணையிலி நாடகசெம்பொற்
பரமகதியிது வாமெனசிந்தித் தழகாகப்-
பவளமனதிரு மேனியுடன்பொற்
சரணஅடியவ ரார்மனவம்பொற்
றருணசரண்மயி லேறியுனமபொற்
கழல்தாராய்;
தகுடதகுதகு தாதகதந்தத்
திகுடதிகுதிகு தீதகதொங்கத்
தடுடுடுடுடு டாடகடிங்குட் டியல்தாளம்-
*தபலைதிமிலைகள் பூரிகைபம்பைக்
†காடிதமருகம் வீணைகள்பொங்கத்
தடி‡யழனவுக மாருதசண்டச் சமரேறி;

* தபலை=பதலை. பதலை=ஓர்வாத்தியம். †காடி=காடிகை=ஓர்பறை.
‡ அழன், அழனம்=பிணம்.

ககனமறைபட ஆடியசெம்புட்
பசிகள்தணிவுற சூரர்கள்மங்கக்
கடல்களெறிபட நாகமுமஞ்சத் தொடும்வேலா;
கயிலைமலைதனி லாடியதந்தைக்
குருகமனமுன நாடியெகொஞ்சிக்
கனகசபைதனில் மேவியகந்தப் பெருமாளே.()

547. வண்டையொத்துக்கயல் கண்சுழற்றுப்புரு
வஞ்சிலைக்குத்தொடு அம்பையொத்துத்தொடை
வண்டுசுற்றுக்குழல் கொண்டலொத்துக்கமு
கென்பகரீவம்;
மந்தரத்தைக்*கட பொங்கிபத்துப்பணை
கொம்பையொக்குத்தன முந்து†குப்பத்தெரு
வந்துஎத்திப்பொரு மங்கையர்க்கைப்பொரு
ளன்பினாலே;
கொண்டழைத்துத்தழு வுங்கைதட்டிற்பொருள்
கொண்டுதெட்டிச்சர சம்புகழ்க்குக்குன
குங்‡குழற்கிப்படி நொந்துகெட்டுக்குடில்
மங்குறுமல்;
கொண்டுசெத்திக்§கட லுண்டுகுப்பத்துனி
னன்பருக்குச்செயல் தொண்டுபட்டுக்கமழ்
குங்குமத்திற்சர ணமபிடித்துக்கரை
யென்றுசேர்வேன்;
அண்டமிட்டிக்குட டிண்டிமிட்டிக்குகு
டந்தகொட்டத்தகு டிங்குதொக்கத்தம
டஞ்சகட்டைக்குண கொம்புடக்கைக்கிட
லென்பதாளம்;
அண்டமெட்டுத்திசை யும்பல்சர்ப்பத்திரள்
கொண்டல்பட்டுக்கிரி யும்பொடித்துப்புல
னஞ்சவித்துத்திர ளண்டமுட்டத்துகள்
வந்தசூரர்;

* கடம் பொங்கு என்பது கட பொங்கு என்றாயிற்று. கடம்=மதம்.
† குப்ப=கூம்ப=குவிய. ‡ குழற்கு=குழலையுடையார்க்கு.
§ கடல் உண்டு உகுப்ப துன்னின் அன்பர்=அகஸ்தியர்.

கண்டமறுக்குட லென்புநெக்குரத்தநச
னங்கடித்துக்குடி லஞ்சிவப்பச்*செநிர்
கண்டெறிக்கத்தலை பந்தரத்துக்கையி
லங்குவேலால்-
கண்களிக்கக்கக னந்தனுங்கப்புக
ழிந்திரற்குப்பதம் வந்தளித்துக்கன
கம்பலத்திற்குற மங்கைபக்கத்துறை
தம்பிரானே. (௫)

548. கங்குலின்குழற் காமுகஞ்சசி
மஞ்சளின்புயத் தாசரம்பெறு
கண்கள்கொந்தளக காதுகொஞ்சுக
செம்பொனாரம்-
கந்தரந்தரித் தாடுகொங்கைக
ளும்பலின்குவட் டாமெனுங்கிரி
கந்தமுஞ்சிறுத் தேமலும்பட சம்பைபோல;
அங்கமைந்திடைப் பாளிதங்கொடு
†குந்தியின்குறைக் காலமைந்திட
அஞ்சிலம்பொலிப் பாடகஞ்சரி கொஞ்சமேவும்-
அஞ்சுகங்குயிற் பூவையின்குரல்
அங்கைபொன்பறிக் காரபெண்களோ
டண்டிமண்டையர்க் கூழியஞ்செய்வ
தென்றுபோமோ;
சங்குபொன்தவிற் காளமுந்‡துரி
யங்களுந்தமிக் காடதிர்ந்திட
சந்தசெந்தமிழ்ப் பாணர்கொஞ்சிட
அண்டகோசம்-
சந்திரன்பதத் தோரவணங்கிட
இந்திரன்குலத் தார்§பொழிந்திட
தந்திரம்புயத் தார்புகழ்ந்திட வந்தசூரை;

---

* செநிர்=செந்நீர்=இரத்தம். †குந்தியின் குறைக்கால்=குதிகால்.
‡துரியம்=தூரியம்=முரசப்பறை. §பொழிந்திட=புஷ்பமாரிசொரிய

செங்கையுஞ்சிரத் தோடுபங்கெழ
அந்தகன்புரத் தேறவஞ்சகர்
செஞ்சரந்தொடுத் தேநடம்புரி கந்தவேளே-
திங்களொண்முகக் காமர்கொண்டவன்
கொங்கைமென்குறப் பாவைபுங்கொடி
செம்பொனம்பலத் தேசிறந்தருள்
தம்பிரானே. (௬)

549. கொந்தளம்*புழு கெந்தவண்பரி
ரம்பசயப்ரம ணிந்தமந்தர
கொங்கைவெண்கரி கொம்பிணங்கிய மடமாதர்-
கொந்தணங்குழ லின்பமஞ்சள
ணிந்துசண்பக வஞ்சிளங்கொடி
கொஞ்சுபைங்கிளி யன்பெனுங்குயில
மயில்போலே;
வந்துபஞ்சணை யின்பமுங்கொடு
கொங்கையும்புய முந்தழுவுற
மஞ்சுவொண்கலை யுங்குலைந்தவ மயலமேலாய்-
வஞ்சினங்கள்தி ரண்டுகண்செவி
யுஞ்சுகங்கள்தி ரும்பிமுன்செய்த
வஞ்சினங்களு டன்கிடந்துட லழிவேனோ;
தந்தனந்தன தந்தனந்தன
திந்திமிந்திமி திந்திமிந்திமி
சங்குவெண்கல கொம்புதந்துமி பலபேரி-
சஞ்சலஞ்சல கொஞ்சுகிண்கிணி
தங்குடுண்டுடு டுண்டுடன்பல
சந்திரம்பறை பொங்குவஞ்சகா ளமீதே;
சிந்தவெண்கழு கொங்குபொங்கெழு
செம்புளங்கரு டன்பருந்துகள்
செங்களந்திகை யெங்குமண்டிட விடும்வேலா-

---

* புழுகெந்த=புழுகு கந்த.

திங்களிந்திர னும்பரந்தர
　　ரும்புகழ்ந்துரு கும்பரன்சபை
　　செம்பொனம்பல மங்கொளன்பர்கள்
　　　　பெருமாளே. (எ)

550. மந்தரமென்குவ டார்தனங்களி
　　லாரமழுந்திட வேமணம்பெறு
　சந்தனகுங்கும சேறுடன்பனி
　　நீர்கள்கலந்திடு வார்முகஞ்சசி
　மஞ்சுறையுங்குழ லார்சரங்கயல்
　　வாள்விழிசெங்கழு நீர்ததும்பிய கொந்தளோலை-

　வண்சுழலுஞ்செவி யார்நுடங்கிடை
　　வாடகடம்புரி வார்மருந்திடு
　விஞ்சையர்கொஞ்சிடு வாரிளங்குயில்
　　மோகனவஞ்சியர் போலகம்பெற
　வந்தவ*ரெந்தவுர் நீரறிந்தவர்
　　போலஇருந்ததெ ஞமயங்கிட இன்சொல்கூறி;

சுந்தர†வங்கண மாய்நெருங்கிநிர்
　　வாருமெனும்படி யாலகங்கொடு
　பண்சரசங்கொள வேணுமென்றவர்
　　சேமவளந்துற நேசனருந்திட
　துன்றுபொனங்கையின் மீதுகண்டவ
　　ரோடுவிழைந்துமெகூடியின்புறுமங்கையோரால்-

　துன்பமுடங்கழி நோய்சிரங்கொடு
　　சீபுழுவுஞ்சல மோ‡டிறங்கிய
　புண்குடவன்கடி யோடிளஞ்§சனி
　　சூலைமிகுந்திட வேபறந்துடல்
　துஞ்சியமன்பதி யேபுகுந்துய
　　ராழிவிடும்படி சீர்பகம்பெறு விஞ்சைதாராய்;

---

* எந்தவுர=எந்தவூர். † வங்கணமாய்=உற்றநேசம
‡ இறங்கிய=இறங்க. § சனி=சன்னி.

அந்தாதுந்துமி யோடுடன்கண
நாதர்புகழ்ந்திட வேதவிஞ்சைய
ரிந்திரசந்திரர் சூரியன்கவி
வாணர்தவம்புலி யோர்பதஞ்சலி
அம்புயனற்திரு மாலொடிந்திரை
வாணியணங்கவ ளோடருந்தவர் தங்கள்மாதர்-
அம்பரம்பைய ரோடுடன்திகழ்
மாவுரகன்புலி யோர்கள்மங்கையர்
அம்புவிமங்கைய ரோடருந்ததி
மாதர்புகழ்ந்திட வேநடம்புரி
அம்புயசெம்பதர் மாடகஞ்சிவ
காமசவுந்தரி யாள்பயந்தருள் கந்தவேளே;
திந்திமிதிந்திமி தோதிமிந்திமி
தீததிதீதித தீதிதோதிமி
தந்தனதந்தன ஞெதனந்தன
தானதனந்தன ஞெவெனும்பறை
செந்தவில்சங்குட னேமுழங்கசு
ரார்கள்சிரம்பொடி யாய்விடுஞ்செயல்
கண்டவேலா-
செந்தினையின்புன மேர்குறிஞ்சியில்
வாழுமிளங்கொடி யாள்பதங்களில்
வந்துவணங்கி*நி ணேமுகம்பெற
†தாளழகங்கையின் வேலுடன்புவி
செம்பொனினம்பல மேலகம்பிர
காரசமந்திர மீதமர்ந்தருள் தம்பிரானே. (அ)

551. வந்துவந்துவித் தூறியென்றனுடல்
வெந்துவெந்துவிட் டோடகொந்துயிரும்
வஞ்சினங்களிற் காடுகொண்டவடி வங்களாலே-

* நிணே=நின்றே. † தாளழக அங்கையின், எனப்பிரிக்க.

மங்கிமங்கிவிட் டேனையுன்றனது
சிந்தைசந்தொஷித் தாளுகொண்டருள
வந்துசித்திரத் தேறிபண்டரொடு
தொண்டர்சூழ;
எந்தன்வஞ்சனைக் காடுசிந்திவிழ
சந்தரணடிசைத் தேவரம்மையர்க
ளிந்துபந்தடித் தாடல்கொண்டுவர *மந்திமேவும்.
எண்கடம்பணித் தோளுமம்பொன்முடி
சுந்தரந்திருப் பாதபங்கயமும்
என்றன்முந்துறத் †தோணியுன்றனது
சிந்தைதாராய்;
அந்தரந்திசைத் தோடவிஞ்சையர்கள்
சிந்தை‡மந்திரத் தோடகெந்தருவ
ரம்புயன்சலித் தோடஎண்டிசையை
யுண்டமாயனை.
அஞ்சிபுள்பரச் சேவைகந்திடென
வந்தவெஞ்சினக் காடெரிந்துவிழ
அங்கியின்குணக் கோலையுந்திவிடு
செங்கைவேலா;
சிந்துரம்பணைந் தோடுகொங்கைகுற
மங்கையின்புறத் தோளணைந்துருக
சிந்துரந்தனைச் சிரமணம்புணர்கல கந்தவேளே.
சிந்திமுன்புரக் காடுமங்கநகை
கொண்டசெந்தழ கோலரண்டர்புகழ்
செம்பொனம்பலத் தாடுமம்பலவர்
தம்பிரானே. (௯)

552. கத்திதுப்§பொங் கலுக்கொத்துப்
பணைத்தாக் ||கொம் பெனத்தெற்றிக
¶கவித்துச்செம் பொனைத்துற்றுக் குழலொர்பின்.

---

* மந்தி=வண்டு. † தோணி=தோன்றி. ‡ மந்திரம்=விசாரம்.
§ பொங்கு அலுக்கு ஒத்து=மிகுந்த இருளுக்குச் சமானமாகி.
|| கொம்பு என தெற்றி=கொம்புபோலச் சடைபின்னி.
¶ கவித்து செம்பொனை=ஜடையில்லை கவித்து.

சிமிட்டிக்கண்களி னூலுறவேமயல்
புகட்டிச்செந்துகி லால்வெளியாயிடை
திருக்திப்பணகுழ லேய்முகிலோவிய
மயில்போலே;
அருக்கிப்பண்புற வேகலைபால்முலை
மறைத்துச்செந்துவர் வாயமுதூறல்க
ளளித்துப்பொன்குயி லாமெனவேகுரல்
மிடறூதை-
அசைத்துக்கொந்தள வோலைகளார்பணி
மினுக்கிச்சந்தன வாசனைசேருட
னமைத்துபபஞ்சணை மீதணைமாதர்க
ளுறவாமோ;
இரைத்துப்பண்டம ராவதிவானவ
ரொளித்துக்கந்தசு வாமிபரா*பர
மெனப்பட்டேழ்கிரி ஏழ்கடல்தூள்பட
அசுரார்கள்-
இறக்கச்சிங்கம தேர்பரியானையொ
டுறுப்பிற்செங்கழு கோரிகள்கூளியொ
டிரத்தச்சங்கம தாடிடவேல்விடு மயிலவீரா;
சிரித்திட்டம்புர மேமதனுருட
லெரிததுக்கண்டக பாலியர்பாலுறை
திகழ்ப்பொற்சுந்தரி யாள்சிவகாமிகல கியசேயே-
திருச்சித்தந்தனி லேகுறமானதை
யிருத்திக்கண்களி கூர்திகழாடக
திருச்சிற்றம்பல மேவியுலாவிய பெருமாளே. ()

554. தத்தையென்றொப்பிடுந் தோகைகட்டங்கொளுவர்
†பத்திரங்கட்‡கயங் காரியொப்புங்குழலகள்
§சசசைசயங்கெச்சையுந் தாளவொத்தும்பதுமை
யென்பகீலச்-

* பரம் என=காப்பது உன் பாரம் என.

† பத்திரம்=அம்பு. ‡ கயம் காரி=கிருண்டகார் மேகம்.

§ சச்சை அம்கெச்சை=சத்திக்கும் காற் சதங்கை.

சங்கரமபொற்குடம் பாலிருக்குந்தனமோ
டொறறிகன்சித்திரம் போலஎத்தும்பறியர்
*சக்களஞ்சக்கடம் சாதிதுக்கங்கொலையர்
சங்கமாதர்;
†சுத்துடும்பித்திடும் சூதுகறகுஞ்சதியர்
முற்பணங்‡கைககொடுந்தாருமிட்டங்கொளுவர்
§சொக்கிடும்புக்கடன் சேருமட்டுந்தனைகும்
விஞ்சையோர்பால்.
தொக்கிடுங்கக்கலுஞ் சூலைபக்கம்பிளவை
விக்கலுந்துக்கமும் சீசபித்தங்கள்கொடு
துபபடங்கிப்படுஞ் சோரனுக்குமபதவி
யெந்தநாளோ;
குத்திரங்கறசண டாளர் ‖ சத்தங்குவடு
பொட்டெழுந்திட்டுநின றுட¶எட்டந்திகையர்
கொற்றமுங்கட்டியம பாடநிரத்தம்பவுரி
கொண்டவேலா.
கொறறாபங்குற்றசிந்தாமணிச்செங்குமரி
பதநரன்புமறளந் தாயெழிற்கொஞ்சுகிளி
கொட்புரந்தொககவெந் தாடவிட்டங்கிவிழி
மங்கைபாலா;

---

* சக்களம் சக்கடம் சாதி=முழுப்பொய்யை பரிகாசத்திறுற் சாதிக்கின்ற.

† சுத்திடும பித்து இடும்=தங்கள்வசத்திற் சுழலும்படியான பித்தேற்றுகின்ற சுத்து - இது சுற்று என்பதன் மரூஉ.

‡ கை கொடு உந்து ஆரும் = கையிற்கொண்டு செலுத்தும் யாவரையும்.

§ சொக்கு இடும்பு கடன் சேருமட்டும் தனகும் = சொக்கும் படியான இடும்பு வார்த்தைகளைச் சொல்லிப் பொருள் பற்றிக் கொள்ளும்வரையில் லீலாவினோதம் பாராட்டும்.

‖ சத்த அம் குவடு=ஏழு மலைகள்.

¶ எட்டு அம் திகையர்=அஷ்டதிக்குப் பாலகர்.

சித்திரம்பொற்குறம் பாவைபக்கம்புணர
செட்டியென்றெத்திவந் தாடிநிர்த்தங்கள்*புரி
சிற்சிதம்பொற்புயஞ் சேரமுற்றும்புணரு
மெங்கள்கோவே-
சிற்பரன்தற்பரன் சீர்திகழ்த்தென்புலியுர்
ருத்திரன்†பத்திரஞ் சூலகாத்தனசபையில
தித்தியென்றொத்திகின் றுடுசிற்றம்பலவா
தமபிரானே. (௧௨)

555. தனத்திற்குங் குடத்தைச்சந்
தனத்தைக்கொண டலைத்துச்சங்
கிலிக்கொத்தும் பிலுக்குடபொன்
தனிற்கொத்துந் தரித்துச்சுக
தரத்திற்பண் பழித்துககண்
சுழற்றிச்சண் பகப்புட்பங் குழலைமேவித்-
தரத்தைக்கொண் டசைத்துப்பொன
தகைப்பட்டுந் தரித்துபபின்
சிரித்துக்கொண் டழைத்தும்கொ
தளத்தைத்தண குலுககிச்‡சங்
கலப்புத்தன் கரந்துககொண
டணைத்துச்சம பரமித்துக்கொண டுறவாடி;
புனித்தப்§பஞ் சணைக்கட்டிண்
படுத்துச்சந் தனப்பொட்டுங்
குலைத்துப்பின் புயத்தைக்கொண்
டணைத்துப்பின் சுகித்திட்டின்
புகட்டிப்பொன் சரக்கொத்துஞ்
சிதைப்பப்பொன் தரப்பற்றும் பொதுமாதர்-

---

* புரி=புரிந்து. † பத்திர அம் சூலம் = இலைகளையுடைய அழகிய சூலாயுதம்.

‡ சங்கு அலம்பு=வளையல்கள் சப்திக்கும்.

§ பஞ்சணைக்கண் இண்படுத்து எனப்பிரிக்க.

புணர்ப்பித்தும் பிடித்துப்பொன்
கொடுத்துடம்பின் பிதிர்ச்சித்தன்
திணிக்கட்டுஞ் சிதைத்துக்கண்
சிறுப்பப்புண் பிடித்தப்புண்
புடைத்துக்கண் பழுத்துக்கண்
டவர்க்குக்கண் புதைப்பச்சென் றுழலவேனோ;
சினத்துக்கண் சிவப்பச்சங்
கொலிப்பத்திண் கலட்டுச்செங்
குவட்டைச்சென் றிடித்துச்*சேண
டரைத்துக்கம பிடிக்கப்பண்
சிரத்தைப்பந் தடித்துக்கொண்
டிறைத்துத்தெண் கடற்றிட்டுங் கொளைபோகச்-
செழித்துப்பொன் சுரர்ச்சுற்றங்
களித்துக்கொண் டளிப்புட்பஞ்
சிறக்கப்பண சிரத்திற்கொண்
டிறைத்துச்செம் பதத்திற்கண்
திளைப்பத்தந் தலைத்†தழ்த்தம
புகழ்ச்செப்பும் சயத்துத்திண் புயமேவனே;
‡பனித்துட்கங் கசற்குக்கண்
பரப்பித்தன் சினத்திற்றிண்
புரத்தைக்கண் டெரித்துப்பண
கயத்தைப்பண் டுரித்துப்பன
பனைத்தக்கன் தவத்தைச்சென்
றழித்துக்கொன் றடற்பித்தன் தருவாழ்வே-
§படைத்துப்பொன் றுடைதிட்டன்
தனைக்குட்டும படுத்திப்பண்

---

* சேண் தரைதுக்கம்பிடிக்கப் பண் = விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் துக்கம்பிடிக்கப் பண்ணிய

† தழ்த்தம் புகழ்செப்பும் = தாழ்த்து அம்புகழ்செப்பும். தாழ்த்து = தாழ்த்தி ‡பனித்து உட்க = நடுங்கி உதிர.

§ படை துப்பு ஒன்று உடை திட்டன் = படைக்கும் வல்லமையுடைய வலியோனாகிய பிரமன்.

கடிப்புட்பங் கலைச்சுற்றும்
பதத்தப்பண் புறச்சிற்றம்
பலத்திற்கண் களித்தபசைம்
புனத்திற்செங் குறத்திப்பெண பெருமாளே.()

556. திருடிகளிணக்கிச் சம்பளமபறி
நடலிகள்மயக்கிச்*சங்கமுண்கிகள்
†சிதடிகள்முலைக்கச் சுமடர்கணடிகள் சதிகாரர்-
செவிடிகள்மதப்பட் டெங்குதண்டிகள்
அசடிகள்‡பிணக்கிட் டும்புறடபிகள்
செழுமிகளழைத்திச் சங்கொளுஞ்செய
வெகுமோகக;
குருடிகள்நகைத்திட் டப்புலம்புந
ருதடிகள்கணக்கிட் டும்பிணங்கிகள்
§குசலிகள் || மருக்திட் டுங்கொடுங்குணர்
விழியாலே-
கொளுவிகள்மினுக்குச் ¶சங்**கிரங்கிகள்
நடனமுநடித்திட் ††டொங்குசண்டிகள்
குணமதிலமுழுச்சுத் தசங்கயசங்கிக
ளுறவாமோ;
இருடியரினத்துற் றும்பதங்கொளு
மறையவனிலத்தொக் குளுசுகம்பெறு
மிமையவரினக்கட் டுங்குலைந்திட வருசூரர்-
இபமொடு‡‡வெதித்தச் சிங்கமும்பல
இரதமொ§§டெதகதிக் குமபிளந்திட
இவுளியிரதத்துற் றங்கமங்கிட விடும்வேலா;

---

* சங்கம்=மைசயோகம் † சிதடிகள்=அறிவிலிகள்.
‡ பிணக்கிட்டும்=பிணக்கிடும். § குசலிகள்=தந்திரவாதிகள்.
|| மருக்திட்டும்=மருத்திடும்=மருந்திடும்.
¶ சங்கு=வளையல். ** இரங்கல்=ஒலித்தல். ††ஒங்கு=தூங்கு,
‡‡ வெதித்த=வேதித்த=பேதித்த,
§§ எதத்திக்கும்=எத்தத்திக்கும்.

